# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KALKI 13.07.2008 ரூ.10.00 96 பக்கங்கள்

# "பையில டிகிரி... கையில வேலை!"

- 'கேரியர் கைட்' ரமா

வேளுக்குடி
ஸ்ரீ க்ருஷ்ணன்
ஸ்வாமிகள்

# கண்ணனைத் தேடி...



(ஆன்மிகத் தொடர்)

பக்கம் 20

# கல்கி

13.07.2008






## மியூசிக்

# ஆகஸ்டில் ஒரு

டிசம்பர் சீஸன்! சில முன்னணி சபாக்களில், மேடையில் பக்கவாட்டில் உட்கார்ந்து கச்சேரி கேட்கவே நூறு ரூபாய் டிக்கெட்!

அரசு இசைக் கல்லூரிகளிலும் தனியார் நடத்தும் இசைப் பள்ளிகள் மற்றும் பயிற்சி வகுப்புகளிலும் பயிலும் மாணவ - மாணவிகளுக்கு இந்தக் கச்சேரிகளைக் கேட்கக் கட்டுப்படியாகுமா? அரை டஜன் சீனியர் ஆர்டிஸ்டுகளையாவது கேட்காவிட்டால் அவர்களுடைய ஆர்வம் அடங்குமா? கற்பனை பெருகுமா? உணர்ச்சி தூண்டப்படுமா? உந்துசக்தி பிறக்குமா...?

இப்படிப் பல 'மா'க்கள் இருப்பதை உணர்ந்தது, ஒரு மா - 'மாத்ருகா' என்ற அமைப்பு. இசை மாணவர்களின் குறை தீர்க்க உறுதி கொண்டது. ஆகஸ்டில் ஒரு டிசம்பர் சீஸனை நடத்த முடிவெடுத்தது! அந்த மாணவர்களிடமே அதற்கான ஆலோசனைகளையும் கேட்டது.

''மியூசிக் அகாடமியின் இசைக் கல்லூரி, கலாக்ஷேத்ரா, சென்னை (அடையாறு) அரசு இசைக் கல்லூரி ஆகிய மூன்று நிறுவனங்களின் மாணவர்கள் சுமார் ஐந்நூறு யோசனைகளை வழங்க, அவற்றிலிருந்து சலித்தெடுத்தும், சேர்த்தும், மாற்றியும் ஆறு நாள் இசை விழாவை வடிவமைச்சிருக்கோம்'' என்கிறார் 'மாத்ருகா'வின் நிறுவனர்களுள் ஒருவரான டி.எம்.கிருஷ்ணா. இப்பணியில் இவருடன் இணைந்து இயங்கிக் கொண்டிருப்பவர் மற்றொரு நிறுவனரான பாம்பே ஜெயஸ்ரீ. மாத்ருகாவின் முயற்சியில் ஒய்.ஏ.சி.எம் (Youth Association for Classical Music) இணைந்துள்ளது. மேற்படி மூன்று இசைப் பயிற்சி நிறுவனங்களும் கைகோத்துள்ளன.

முன்னணி வாய்ப்பாட்டு, வாத்திய இசைக் கலைஞர்கள் அனேகர் பங்கேற்கும் கச்சேரிகள், அவற்றின் இறுதியில் கேள்வி - பதில் நேரம், செயல்முறை விளக்க நிகழ்ச்சிகள், கலைஞர்களைப் பற்றிய டாகுமென்டரி படங்கள், கலைஞர்களுடன் நேருக்கு நேர், மாணவர்களே வழங்கும் கச்சேரிகள் என்று இந்த இசைவிழா, காலை 9.00 மணி தொடங்கி பிற்பகல் மூன்று மணி வரையிலான பல்சுவை

ஸ்வானுபவா குறித்து மேலும் விவரங்களுக்கு:

http://svanubhava.blogspot.com/ பதிவு செய்துகொள்ள விரும்பும் இசை மாணவர்கள், விண்ணப்பங்களை svanubhava@gmail.com என்ற இணைய முகவரிக்கு அனுப்பவும்.

**தொடர்புக்கு:**

ரித்விக் : 9884234740
எஸ்.ஆர்.எதிராஜன் : 9840211166
எமானுயல் : 9840118451
கார்த்திகா : 9941218120
சைத்ரா : 9884606531

பாக்கேஜ் ஆக ஆகஸ்ட் 5 முதல் 10 வரை நடைபெறும்.

''மாணவர்களுக்குச் சௌகரியமான நேரத்தில் அவர்களுடைய வகுப்பறை வாசலுக்கே நிகழ்ச்சிகளை எடுத்துச் செல்கிறோம்'' என்கிறார் ஜெயஸ்ரீ.

மதிய உணவும் தரப் போகிறார்களாம்! அப்படியானால் செலவு...? ஸ்பான்ஸர்கள் உதவி தேவைப்படுமே...?

''தேடிக்கொண்டிருக்கிறோம்'' என்கிறார் கிருஷ்ணா.

இவ்விருவரும் அடிக்கடி புது முயற்சிகளில் இணைவதன் ரகசியம் என்ன...?

''சுருதி வேறாயிருந்தாலும் எங்க அலை வரிசை ஒண்ணா இருக்கு... மாத்ருகாவைச் சேர்ந்து ஆரம்பிச்சோம்'' என்கிறார் கிருஷ்ணா.

'ஸ்வானுபவா' என்ற பெயரிலான இந் நிகழ்ச்சியில், தனியார் பள்ளிகளிலும் தனிப் பட்ட முறையிலும் இசை கற்கும் மாணவ -

# டிசம்பர்!

மாணவிகள் இதில் கட்டணம் இன்றிப் பங் கேற்கலாம்.

''இது போன்ற நிகழ்ச்சிகளை சென்னை யிலேயே மீண்டும் மீண்டும் நடத்துவது என்ன நியாயம்?'' என்று கேட்டால், ''பொறுங்கள், அடுத்தடுத்த ஆண்டுகளில் 'ஸ்வானுபவா' வெவ்வேறு ஊர்களுக்கு தம்பூராவுடன் ரயி லேறிவிடும்'' என்கிறார் கிருஷ்ணா.

சரி, 'ஸ்வானுபவா' என்ற பெயர் ஏன்...?

''ஸ்வானுபவம் என்பது, ஒரு கலைஞர் தமது படைப்பின் மூலம் பெறும் பிரத்யேக அனுபவம் - அவருக்கு மட்டுமே சொந்தமானது. இந்த இசைவிழாவுக்கு வரும் ஒவ்வொரு மாணவருக்கும் அத்தகைய பிரத்யேக அனுப வமாக அது அமையணும்ங்கற நோக்கில் அப் படிப் பெயர் வைச்சோம்'' என்கின்றனர் இருவரும். இந்த ஆறுநாள் இசை விழாவில் மாணவரல்லாத மாமா - மாமி ரசிகர்களுக்கு ''நோ என்ட்ரி, ப்ளீஸ்!''

– சீதா ரவி




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: **லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

வடிவமைப்பு : **எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி : 044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் : 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு : marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் : info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# தமிழ்நாடு அடிமாடு

காங்கிரஸைப் பற்றி இன்று எதுவும் செய்தி இல்லையா? கவலைப்பட வேண்டாம். 'தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் மாற்றம்' என்று போட்டுவிடுங்கள் என்பது தமிழக தினப் பத்திரிகைகளின் ஆசிரியர் இலாகாவில் நக்கலாகச் சொல்லப்படும் கமெண்ட். தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் மாற்றம், நிர்வாகிகள் மாற்றம் ஆகியவை அன்றாடம் அடிபடும் செய்திகளாகிவிட்டன. இப்போது அடுத்த தலைவர் ஞானதேசிகனா... சுதர்சன நாச்சியப்பனா என்று பட்டிமன்றம் நடந்து கொண்டிருக்கிறது.

### கிருஷ்ணா – கோவிந்தா!

எந்தக் கோஷ்டியிலும் சேராதவர் என்ற பெருமை இவருக்கிருந்தாலும், தன் நிழலேகூட தன்னைத் தொடராத அளவுக்கு தொண்டர் பலம் இல்லாததால், கிருஷ்ணசாமியை யாரும் மதிக்கவில்லை. பா.ம.க., தி.மு.க கூட்டணியிலிருந்து வெளியே அனுப்பப்பட்ட பின், டாக்டருக்கு சம்பந்தியான கிருஷ்ணசாமியைத் தூக்க வேண்டும் என்று மற்றொரு காரணத்தையும் தலைமையிடம் வைத்தன மற்ற கோஷ்டிகள். 'இப்படி இருந்தால், எப்படி காங்கிரஸ் உருப்படும்?' என்று நண்பர்களிடம் புலம்புகிறார் கிருஷ்ணசாமி.



* ஞானதேசிகன்



* பீட்டர் அல்போன்ஸ்



* தமிழருவி

### அருண்குமார் அரோகரா

மேலிடப் பொறுப்பாளராக நியமிக்கப்பட்ட நாளிலிருந்தே, வாசன் கோஷ்டிக்கும் இவருக்கும் நறநறதான். இந்த நிலையில் கோயமுத்தூரில் வாசன் ஆதரவு மாவட்டத் தலைவர்களை, பிரபுவின் அழுத்தத்தில், அருண்குமார் தூக்க, எதிர்ப்புக் கொடி தூக்கத் துவங்கிவிட்டது வாசன் தரப்பு. அம்மையாரிடம் சென்று வாசன் அழுது புலம்ப, அருண்குமாருக்கு செக் வைப்பது போல அவருக்கு மேலே வயலார் ரவியைப் போட்டு விட்டார்கள். ஆனாலும் அருண்குமாரின் அதிரடி ஓயவில்லை. 'மாநில தலைவரோடு, மாவட்ட தலைவர்களையும் கட்சி மேலிடம் நியமிக்கக் கூடாது. அந்தப் பொறுப்பைப் புதிய தலைவரிடம் கொடுத்துவிட வேண்டும்' என்று வாசன் தரப்புப் போராடி வருகிறது. இந்த நிலையில், அருண்குமார் அமெரிக்காவுக்குப் பறந்துவிட, மேலிட அறிவிப்புகள் சற்று தாமதம் ஆகலாம் என்று சொல்லப்படுகிறது.

### கோஷ்டி கானம்

"இன்று தமிழகத்தில் ஜெயந்தி நடராஜன், தங்கபாலு என்று பல கோஷ்டிகள்; இவர்கள் எல்லோருமே காகித எலிகள்தான். இன்றைய தொண்டர் பலம் நாளைக்கும் வாசனுக்குத்தான்" என்கிறார் காங்கிரஸ் அரசியலிலிருந்து விலகி நிற்கும் தமிழருவி மணியன்.

### கட்டைப் பஞ்சாயத்து காங்கிரஸ்

"கலர், கலர் போஸ்டர் அடிப்பவர்

களும், கட்டைப் பஞ்சாயத்து செய்பவர்களும்தான் இன்று காங்கிரஸில் கலக்குகிறார்கள். சத்தியமூர்த்தி பவனுக்கு வரும்போதே அடியாட்கள் துணையுடன் வருகிறார்கள். இன்று கட்சியில் ஒழுங்கீனம் என்பது பரவலாகிவிட்டது. தொண்டர்கள் மிகவும் சுணங்கிப் போய்விட்டார்கள். தில்லிக்கு 35 பேருடன் சென்று காங்கிரஸில் மீண்டும் இணைந்த சிதம்பரம், அதில் பெரும்பாலோருக்கு வங்கிகளிலே இயக்குநர் பொறுப்பு வாங்கிக் கொடுத்துவிட்டார். இதைக் கண்டு மற்ற தலைவர்களின் கோஷ்டிகள் பொருமிக்



# காங்கிரஸ் காங்கிரஸ்!

கொண்டிருக்கின்றன'' என்கிறார் வாசன் ஆதரவு சீனியர் தலைவர் ஒருவர்.

### இளங்கோவன் இன்ப அதிர்ச்சி

**வா**சன் ஆதரவு ஞானதேசிகன் தலைவராகப் பொறுப்பேற்க, இளங்கோவனும் ஒப்புதல் கொடுத்து விட்டாராம். சுதர்சன நாச்சியப்பன் தலைவராக வந்தால், அவரைச் சுற்றி மற்றொரு கோஷ்டி உருவாகும். இருக்கிற கோஷ்டியைச் சந்திப்பதே மேல் என்ற முடிவுக்கு இளங்கோவனும் வந்துவிட்டாராம். நாச்சியப்பன் தலைவராக வந்தால், மாவட்ட அரசியலில் தமக்குக் குடைச்சல் கொடுப்பார் என்று சிதம்பரமும் அவரை விரும்பவில்லையாம்.

### அடிமாடு காங்கிரஸ்

**அ**டங்காத காளையாக இருந்த தமிழ்நாடு காங்கிரஸ், இன்று அடிமாடாக மாறிவிட்டது. இதற்குக் காரணம் கடந்த 39 ஆண்டுகளாக, ஜனநாயக காற்றே வீசாததுதான். வட்டத்திலிருந்து மாநில தலைமை வரை உட்கட்சி தேர்தலை நடத்தி நிர்வாகிகளைப் போட்டாலே தவிர, தமிழ்நாட்டில் கட்சி உருப்பட வாய்ப்பே யில்லை. இப்படியே போனால், காலப் போக்கில் கட்சி காணாமல் போனால் அவர்களும் மதிக்க மாட்டார்கள்'' என்கிறார் தமிழருவி மணியன்.

### ஓவர்ஹால் ப்ளீஸ்

''**த**மிழ் நாட்டில் காங்கிரஸ் இயந்திரம் பழுது பட்டுக் கிடக்கிறது. இதைப் பழுது பார்த்து, ஓவர்ஹால் செய்வது என்பது எந்தத் தலைவருக்குமே ஒரு சவாலான விஷயம். அது புதிய தலைவருக்கும் பொருந்தும். எல்லோர் ஆதரவும் கிடைக்கவேண்டுமென்பதே என் விருப்பம். அது நடந்தால் காங்கிரஸுக்கு அதிர்ஷ்டம்தான்'' என்கிறார் பீட்டர் அல்போன்ஸ்.

- ப்ரியன்




# "பையில டிகிரி... கையில வேலை!"

**அ**ண்மையில் பலரையும் அதிர்ச்சியில் ஆழ்த்தியது அந்தச் செய்தி. சென்னையில் பி.டி.எஸ். எனப்படும் பல் மருத்துவப் படிப்பு படித்து வந்த மாணவி ஒருவர், எம்.பி.பி.எஸ். சீட் கிடைத்துவிட்டது என்பதற்காக மூன்று வருடம் படித்து வந்த பி.டி.எஸ். படிப்பைத் தூக்கியெறிந்துவிட்டு வந்துவிட்டார். இப்படித்தான் இருக்கிறார்கள் இன்றைய மாணவர்கள் பலரும். மருத்துவம் மற்றும் இன்ஜினியரிங் மீது மட்டும் அவர்களுக்கு ஏன் அப்படியொரு மோகம்? வேலை வாய்ப்புக்கு உத்தரவாதம் தரும் வேறு படிப்புகளே இல்லையா? சென்னை ஏ.சி.இ.சாஃப்ட் ஸ்கில்ஸ் டிரெய்னிங் அண்ட் டெவலப்மெண்ட் கம்பெனியின் தலைமைப் பயிற்சியாளர் ரமாவிடம் சின்ன சேலம், இதயா கல்லூரி மாணவிகள் இது குறித்து விவாதித்ததிலிருந்து...

**ரமா :** இன்னைக்கு உலகம் ரொம்ப வேகமா மாறிட்டு வருது. அதுக்கேத்த மாதிரி ஸ்டூடண்ட்ஸும் 'உடனே உடனே'ன்னு எல்லாத்துலயும் பறக்கறாங்க. நல்லா பணமும் சம்பாதிக்க விருப்பப்படறாங்க. தங்களுக்கு முன்னாடி யார், என்ன, எது செஞ்சாங்களோ அதை அப்படியே ஃபாலோ பண்ணிட்டுப் போயிட்டே இருக்காங்க. பெத்தவங்களும் தாங்கள் படிக்க முடியாத கனவுப் படிப்புகளைத் தங்களோட பிள்ளைங்களாவது படிக்கணும்னு தாபம் போட,

எம்.பி.பி.எஸ்., இன்ஜினியரிங்னு எல்லாரும் முட்டி மோதறது நடக்குது.

**ஜெயப்ரியா :** உண்மை தான். என் தோழி ஒருத்திக்கு கம்ப்யூட்டர் சயின்ஸ் படிக்கணும்னு கொள்ளை ஆசை. ஆனா, அவளோட அப்பா, தான் சின்ன வயசுல ஆசைப்பட்டுப் படிக்க முடியாத எம்.பி.பி.எஸ். படிப்பைத்தான் அவ படிக்கணும்னு கட்டாயப்படுத்தி படிக்க வைச்சார். ஆர்வம் இல்லாததால அவளால சோபிக்க முடியல.

**ரமா :** மருத்துவம், இன்ஜினியரிங் அல்லாத நிறைய வகுப்புகள் கொட்டிக் கிடக்குது. இன்ஜினியரிங்னு எடுத்துக்கிட்டாலும் சிவில், மெக்கானிக்கல், ட்ரிபிள் இ, சி.எஸ்.இ., ஐ.டி.ன்னு அஞ்சு மேஜர் மட்டும்தான் பெரும்பாலானவங்களுக்குத் தெரியுது. பெட்ரோலியம், ரப்பர் டெக்னாலஜி, ஏர் கிராஃப்ட், நானோ டெக், பயோ டெக்னாலஜின்னு சம்பளத்தையும் எதிர்காலத்தையும் அள்ளித் தர்ற படிப்புகள அடுக்கிக்கிட்டே போகலாம்.

**ஜெனிஃபர் :** ஆர்ட்ஸ் படிச்சாலும்கூட யாரும் வீணாப் போறதில்ல. பி.எஸ்.ஸி. மேத்ஸ் படிச்ச உடனே என் ஃப்ரெண்டுக்கு நல்ல சம்பளத்துல வேலை கிடைச்சது. பி.பி.ஏ., எம்.பி.ஏ. படிச்ச என் தோழிகள் பலரும் நல்லாத்தான் சம்பாதிக்கறாங்க. எந்தப் படிப்பா இருந்தாலும் நல்ல விதமா படிச்சா, அவுட் ஸ்டாண்டிங் பர்ஃபார்மென்ஸ் காட்டினா, ஆண்டவனே நினைச்சாலும் நம்ம வெற்றியைத் தடுக்க முடியாது.

**ரமா :** தமிழ் படிச்சா கேவலம்னு நினைச்சுக்கிட்டு, இப்பல்லாம் பலரும் பி.ஏ., எம்.ஏ. தமிழ் பக்கம் போறதே இல்ல. விளைவு, தமிழ் சார்ந்த பல வேலைகளுக்கு இன்னைக்கு ஆள் பற்றாக்குறை இருக்கு. எம்.ஏ. முடிச்சுட்டு கூடுதலா எம்.ஃபில். பண்ணா, ஏகப்பட்ட வேலைங்க உடனடியாக கிடைக்குது. டீச்சர்



* ரமா

## "எம்.ஏ. முடிச்சிட்டு கூடுதலா எம்.ஃபில். பண்ணா, ஏகப்பட்ட வேலைங்க உடனடியாக கிடைக்குது"

## - 'கேரியர் கைட்' ரமா

டிரெய்னிங், நர்சிங், பி.பார்ம், பிசியோதெரபி, பி.பி.எம். போன்ற மேனேஜ்மெண்ட் படிப்புகள் பல வகைப்பட்ட டிப்ளோமா படிப்புகள், சித்தா, கால்நடை மருத்துவம்னு உடனடி வேலை வாய்ப்புக்கு உத்தரவாதம் தர்ற பல நல்ல கோர்ஸ்களை நாம மறந்தே போறது, மாணவர்களது துரதிர்ஷ்டம்தான்.

**ஷோபனா :** இது மாதிரியெல்லாம் நல்ல பல வாய்ப்புகள் இருக்குங்கறது, இந்த மாதிரி ஒரு பத்திரிகை கலந்துரையாடல்லதான் எனக்குத் தெரியுது. ஆக, இந்த விஷயத்துல மீடியா சப்போர்ட் கட்டாயம் வேணும். +2, பத்தாம் வகுப்பு ரிசல்ட்டுக்கு முன்னாடியே ஆக்கபூர்வமான படிப்புகள் பத்தி மாணவர்களுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டற மாதிரி, கட்டுரைகள் வெளியிடலாம். இன்றைய மோசமான அரசியல் பத்தியும், தேவையில்லாத வம்பு பத்தியும் எழுதித் தீர்க்கற நேரத்துல, மனிதாபிமானத்தோடு எங்களுக்கும் கொஞ்சம் இடம் தரலாம்.

**"செக்கு மாட்டுத்தனமா எப்பப் பாரு மருத்துவம், இன்ஜினியரிங்னு அலைபாயாம மனசைத் திறந்தா ஏராளமான வாய்ப்புங்க தாராளமா..."**

**ரமா :** என்னதான் மீடியா உதவினாலும், மிக முக்கிய பொறுப்பு பெத்தவங்களைச் சார்ந்துதான் இருக்கு.

**ராஜேஸ்வரி :** அரசாங்கமும் இந்த விஷயத்துல தலையிட்டு உதவியே ஆகணும். வேலைவாய்ப்புகளை அடையாளம் காட்டறதன் மூலமா, ஒரு மறுமலர்ச்சிய ஏற்படுத்த முடியும். உயர் கல்வி, பள்ளிக் கல்வின்னு ரெண்டா பிரிச்சு தரமா வழங்கற மாதிரி, மருத்துவம், பொறியியல் தவிர்த்த மாற்றுப் படிப்புகள் குறித்தும் கவுன்செலிங், ஒளிபரப்புகள், விளம்பரங்கள் மூலமா விழிப்புணர்வை ஏற்படுத்தலாம். பள்ளிக் கல்வி நாட்களிலிருந்தே மாணவர்களுக்கு, மற்ற படிப்புகள் குறித்த கருத்தைப் பதிவு பண்ணலாம்.

**மேரி :** வாழ்க்கையில முன்னேறணும்ங்கற எண்ணம்தான் இன்னைக்கு முக்கியமே தவிர, அது எந்தப் படிப்புலயும் சாத்தியம்ங்கறதை நல்லாவே புரிஞ்சுக்கிட்டோம்.

**ஷோபனா :** முடிஞ்ச வரை எங்களோட இந்த மனமாற்றத்தை, மற்ற மாணவர்களுக்கும் வலியுறுத்துவோம்.

**- மு.மாறன்**



உ

சிவமயம்

திருவாரூர் மாவட்டம் குடவாசல் வட்டம்

ஸற்குணேஸ்வரபுரம் என்கிற

# கருவேலி

# ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரி ஸமேத

# ஸ்ரீ ஸற்குணேஸ்வர ஸ்வாமி திருக்கோயில்

# ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்

தஞ்சைத் தரணியின் குடவாசல் வட்டத்தில், காவிரியின் தென்கரையில் உள்ளதுதான் அப்பர் ஸ்வாமிகளால் பாடப் பெற்ற, கருவேலி என்னும் கருவிலி திருத்தலம். சற்குண ராஜனால் திருப்பணி செய்யப் பெற்றதால், சற்குணேஸ்வரபுரம் என்றும் பெயர் பெற்ற கோயிலில், அருள்மிகு ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமி, ஸ்ரீ ஸர்வாங்க சுந்தரி அம்பாளுடன் சேர்ந்து அருள்பாலிக்கிறார். சிதிலமுற்றிருந்த இவ்வாலயத்தில்,1997ம் ஆண்டு கருவேலி குழந்தை ஐயர் சந்ததியினரால், கிராமவாசிகள், மற்றும் நண்பர்களின் ஒத்துழைப்புடன் திருப்பணிகள் செய்யப் பெற்று, 27.3.1997ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இப்பொழுது ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி சன்னிதிகள், ஸ்வாமி, அம்பாளுக்கு ராஜகோபுரங்கள் புதிதாகக் கட்டப்பட்டும், பிராகாரம், நந்தவனம், திருக்குளம் ஆகியவை புதுப்பிக்கப் பட்டும், ***நிகழும் ஸர்வதாரி வருஷம் ஆனி மாதம் 30ந் தேதி (14.7.2008) மகா கும்பாபிஷேகம் நடைபெறுகிறது.*** 9.7.08 புதன் காலை 9 மணி அளவில் விக்னேஸ்வர பூஜையுடன் தொடங்கி, வியாழன் வாஸ்து சாந்தி. 11.7.08 வெள்ளிக்கிழமை முதல் யாகசாலை பூஜைகள் 6 காலம் தொடர்ந்து நடக்கின்றன. நிகழ்ச்சிக்கு முத்தாய்ப்பாக **14.7.2008 திங்கட்கிழமை காலை 9.30 மணி அளவில் மகா கும்பாபிஷேகம் நடைபெறுகிறது.** அன்று மாலை, திருக்கல்யாணமும், ஸ்வாமி வீதி உலாவும் நடைபெறும்.

15.7.08 செவ்வாய் அன்று மண்டலாபிஷேகம் தொடங்குகிறது. *

அன்பர்கள் அனைவரும் மகா கும்பாபிஷேகத்தில் கலந்து கொண்டு இறைவனை தரிசித்து, இகபர பேறு அடைய பிரார்த்திக்கிறோம்.

இங்ஙனம்

அவ்வண்ணமே கோரும்
Dr.V. கிருஷ்ணமூர்த்தி,
*பரம்பரை தர்மகர்த்தா*

திரு.பொன் சிவசங்கரன், M.A
*நிர்வாக அதிகாரி, கூடுதல் பொறுப்பு*

தெய்வத் திருப்பணியில்,
கிராமவாசிகள் மற்றும்
ஸ்ரீ ஸற்குணேஸ்வரர்
கைங்கர்ய சபா
Ph : 0435 - 2420047

* மண்டலாபிஷேகம் செய்ய விரும்புபவர்கள் ஆலய அலுவலகத்தைத் தொடர்பு கொண்டு முன் பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம்.

ஸ்ரீ ஸற்குணேஸ்வரர் திருக்கோயில், கருவேலி - 609 501. போன் : **04366 273900.**

*சென்னை அலுவலகம் :*

**Sri Sarguneswara Swami Temple Management Committee,**
6A, Warren Road, Mylapore, Chennai - 600 004. Phone : 044-2499 4535

***கருவேலி:*** கும்பகோணம் - பூந்தோட்டம் சாலையில் கூந்தலூருக்கு வடக்கே ஒரு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. கருவேலிக்குப் பேருந்து வசதி உண்டு.

# காஃபி ஷாப்

**'எ**ல்லாம் பயம் மயம்' தெனாலி டயலாக் பேசற பொண்ணுங்கள, டைனாக் குலர் வெச்சுக்கூட கண்டுபிடிக்க முடியாது. எல்லாமே தைரியசாலியாத்தானே இருக்கு? அப்படியும் சில ஃபிகர்ஸைத் தேடிப் பிடிச்சிட்டோம். அவங்கள காஃபி ஷாப்புக்கு அழைச்சு வந்தோம்.



**ஹேமா :** 'மியாவ்... மியாவ்'னு சத்தம் கேட்டா திகில் வந்துடும். திருவிழாவுல காணாமப் போன புள்ள மாதிரி, முழிச்சிட்டு இருப்பேன். பூனைக் கண்ணு ரொம்ப மோசம். ஒரு நாள் நான் வாசல்ல ஹாய்யா காத்து வாங்க வர்றதுக்கும் *(காத்து எவ்வளவு வெல?)* மதில்ல இருந்து ஒரு பூனை கீழ குதிக்கறதுக்கும் சரியா இருந்தது. என்மேல அது விழுந்து, நான் 'அய்யோ அய்யோ'ன்னு கத்தி *(பூனை பூனைன்னு தானே கத்திருக்கணும்)* அக்கம் பக்கமே கூடிப் போச்சு.

**பிரேம ரஞ்சனி :** பாய் ஃபிரண்ட்ஸ் இல்லாம பொண்ணுங்க மட்டும் காஃபி சாப்பிடறது போர்ப்பா! ஆனா, என் 'பய'லஜி கதை கி.பி. 1995-ல நடந்தது. அப்போ, நான் ஆறாவது படிச்சுக்கிட்டு இருந்தேன். *(அதுக்குப் பிறகு படிச்சீங்களா...?)* டியூஷன் அறையில சுவத்து மேல இருந்த குட்டி டினோஸர் மேல, ஒரு பையன் சாக்பீஸக் குறி பார்த்து வீச... *(குட்டி டினோஸர் தேவதச்சன் கவிதையைக் காப்பி அடிக்கிறீங்களா?)* அது எம் மேல விழுந்து பாவாடையில அட்டையா ஒட்டிக்க, ஐய்யோ நெனச்சாலே அருவருப்பு. இப்பவும் பல்லி பக்கம் போறதில்ல. வீட்லகூட பல்லி இருந்தா, மயில் இறகு வாங்கி வைச்சிடுவேன். பல்லி பயந்துடும்.

**உமாபதி :** *(பாம்பப் பாத்தா படையே நடுங்கும். உமா எம்மாத்திரம்)* ஏய் கரெக்ட்பா! முடிச்சா தானே கமெண்ட்ஸ் கொடுப்பீங்க... எனக்கு மட்டும் ஏன் முன்னாடியே தந்தீங்க? சின்ன வயசுல



**கெஸ்ட் டயலாக்!**

**கடவுளுக்குப்
பயப்பட்டால் ஞானம்;
கண்டதற்கெல்லாம்
பயப்பட்டால் ஊனம்!
கட்னவளுக்கு
பயப்பட்டால் மோனம்!**

இருந்து பாம்பு சினிமா, கோயில் பாம்புப் புத்து, பழிவாங்கற பாம்புக் கதை, பாம்பு கடிச்சு நுரை தள்ளி செத்த வங்கன்னு பாம்பு பயம் மனகல நாறிப் போச்சு லாரி, ஊறிப்போச்சு (பாம்பு பத்திச் சொன்னாலே, 'டங்'கு ஸ்லிப் ஆகுதே, நேர்ல நின்னா எப்படி அல றுவீங்க?). பாம்பு வர்றத ஏதோ கெஸ்ட் மாதிரி சொல்றீங்க. ஒரு நாள் பக்கத்து வீட்ல பாம்பு வந்து தப்பிச்சுடுச்சு. அது எஸ்கேப் ஆனதிலிருந்து மனகல 'பக்'. மாடியிலகூட படுக்கல, அங்க வந்துகூட

(யாரை நாய்னு சொல்றாங்க?) எனக்கு அது ரொம்ப கடுப்பாகும்.

இப்படியே போனா... கரப்பான், மூட்டைப் பூச்சி, சோளக்காட்டு பொம்ம, பழைய பாய் ஃபிரண்ட்னு உங்க 'பய' லிஸ்ட் நீளும். நடிச்சது போதும். காஃபியைக் குடிச் சிட்டு, நடைய கட்டுங்க. அடுத்து யாரை மொக்க போடலாம்னு திட்டம் தீட்டுங்க என்றதும், கிளம்ப மனசின்றி நகர்ந்தனர்.

– எம்.திரவிய முருகன்

# பயந்தாங்குளிங்க...



பேய், பரீட்சை, பில்லி சூன்யம் இன்னபிற பயங்களைப் பிடித்து விரட்டலாம். பயத்திடம் பயந்தால் போச்சு, போச்சு! பிறக்காது பிழைக்கிற வழி!




சுருண்டு படுத்திருக்குமோன்னு. (பெரும் பாலும் பாம்புங்க பயத்துலதான் கடிக் கும்னு தெரியுமா உமாபதி?)

**ரேணுகா ரூபவாணி :** (இலங்கை டீ.வி.யாட்டம் என்ன ஒரு அழகான பேரு!) வீட்டு நாய், நாட்டு நாய், போலீஸ் நாய், தெரு நாய் எந்த நாயா இருந்தாலும், எனக்குப் பயம்தான். பாம்பு, பூனை எது கடிச்சாலும் ஒரு ஊசி. ஆனா, இந்த நாய் கடிச்சா மட்டும்தான் தொப்புளச் சுத்தி 16 ஊசி. அதுவும் 'லொள் லொள்'னு குலைக்கிறதே... நெஞ்சுல பக்கு பக்குனு பயம் வந்துடும். நாய் இல்லாத வீட்லகூட நாய்கள் ஜாக்கிரதை போர்ட் இருக்கும் பாருங்க...

அமெரிக்காவிலும் குழந்தைகளிடம் ஒரு பதினைந்து நிமிடம் நமது தாலாட்டைப் பரிசோதித்துப் பார்த்தோம். அந்தக் குழந்தைகளும் அதைக் கேட்டு, சுகமாகத் தூங்கினார்கள்.

பாட்டு தெரியலைன்னாலும், பாடத் தெரியலைன்னாலும் பரவாயில்லை.



குழந்தையின் காதுக்குள் சென்று குழந்தையின் அறிவைச் சீராக வளர்க்கிறது. மனோதத்துவ ரீதியாக குழந்தைக்கு ஆரோக்கியமானதும்கூட.

ஏழைத் தாய், செல்வத் தாய் என்னும் பாகுபாடில்லாமல், பாடுவதற்கான பொதுவான ஒரு தாலாட்டுப் பாடலை நாங்கள் வெளியிட்டுள்ளோம். மற்றபடி, அவரவர்களே இட்டுக் கட்டிப் பாடுவது அவரவர் தனித் திறமை.

'ஆராரோ ஆரிரரோ! - என் கண்ணே
ஆராரோ ஆரிரரோ!
சீராடும் எங்கள் குல - என் கண்ணே
சிறுமணியே கண்ணுறங்கு!
கண்ணுறங்கு கண்ணுறங்கு - என்
கண்ணே
கண்மணியே கண்ணுறங்கு!
ஆழி கடலாழி - என் கண்ணே
அரசாள வந்த நாயகமோ!
தைப்பூச நீராடி - என் கண்ணே
தவம் செய்து
வந்தவனோ!

பறங்கிக் கொடி பிடுங்கி - என்
கண்ணே
பரணியிலே தொட்டில் கட்டி

# உலகமொழி

லொலலலாயீ... என்று ஆரம்பித்து ஆராரோ ஆரிரரோ என்பதைப் பல்வேறு மெட்டுகளில் மாற்றி மாற்றிப் பாடினாலே போதும், குழந்தை தூங்கிவிடும். தியாகராஜ ஸ்வாமிகளின் 'உற்சவ சம்பிரதாய ஸ்துதி - பவனஜ ஸ்துதி பாத்ர பாவன சரித்ர' என்னும் மெட்டில் ஆராரோ ஆரிரரோ பாடினால், குழந்தைகளை மட்டுமல்ல யாரையுமே சொக்க வைத்துவிடும். அப்படியொரு இனிமையான மெட்டு அது. நீலாம்பரியும் குறிஞ்சிப் பண்ணும் தாலாட்டுக்கு மிகவும் உகந்தவை.

தாலாட்டுப் பாடலின் நயமான ஒலி,

பாலன் குரல் கேட்க - என் கண்ணே
பல தவம் செய்தேனோ!

கண்ணே கமலப்பூ! - என் கண்ணே
கையிரண்டும் தாமரைப் பூ!
மேனி மகிழம்பூ! - என் கண்ணே
மேல் நாட்டுத் தாழம் பூ!'

ஒரு குழந்தை, தன்னை 'அம்மா' என்று அழைப்பதற்குக் கோடி தவம் செய்திருக்க வேண்டும். 'என்ன தவம் செய்தனை யசோதா...' என்பதைப் போல, தாலாட்டுப்

"தலைவருக்கு ஆனாலும் இவ்வளவு அல்பத்தனம் கூடாது!"

"என்ன ஆச்சு?"

"ஆரத்தி எடுத்தபோது, பக்கத்துல நின்னுக்கிட்டு இருந்தவர் பையிலேயிருந்து காசு எடுத்து தட்டிலே போட்டார்!"

– அனன்யா



பாட வாய்த்த தாய்மார் அனைவருமே தவம் செய்தவர்கள்தாம்.

குழந்தைகளிடம், பெற்றவர்கள் நிறைய பேசணும். நாம் பெரியவங்க என்கிற அகங்காரம் இல்லாமல், குழந்தையோடு குழந்தையாகி உரையாட வேண்டும். வெளிநாடுகளில் அப்பா வெளியே கிளம்பும்போது, எங்கே போறன்னு குழந்தை கேட்டால், பொறுமையா விளக்கமான பதிலைச் சொல்றாங்க. ஆனால், இங்க பாருங்க. அப்பா வெளியே கிளம்பும்போது, எங்கே போறன்னு கேட்டுடக்கூடாது. 'போறபோதே எங்க போறன்னு கேட்குது. சனியனே... விளங்கின மாதிரிதான்' என்று எரிந்து விழுகிறார்கள். அதற்குப் பிறகு எந்தக் குழந்தைதான் ஆர்வமாகக் கேள்விகள் கேட்கும்? அதன் அறிவு எப்படி வளரும்?

தாய்ப் பாசத்தையும் தாய் மொழியையும் ஊட்டுவதற்கான சிறந்ததொரு கருவி, தாலாட்டு மட்டும்தான். கிராமங்களில், கூட்டுக் குடும்பங்களாக தாத்தா, பாட்டி, அப்பத்தா, அப்பச்சியரோடு வளரும் குழந்தைகளுக்குத் தாலாட்டுப் பாடல் கேட்கப் பஞ்சமிருக்காது. அவர்கள் கொடுத்து வைத்தவர்கள்!

எங்கள் முதல் பெண் குழந்தை பல்லவி தன்னுடைய நான்கு வயதிலேயே பாடியிருக்கிறாள் என்று சொல்லியிருக்கிறேன். ஐரோப்பியப் பயணத்தில் ஒரு கச்சேரி, ஆதரவற்ற குழந்தைகளின் நிதிக்காக நடந்தது. அதில்

***'அண்ணன்மாரே அக்காமாரே***
***சொல்லுறதக் கேளுங்க - நீங்க***
***பொம்மை வாங்கும் பணத்தை இந்தக்***
***குழந்தைகளுக்குக் கொடுங்க'***

என்று பாடி ரொம்பவும் நெகிழ்வாக்கியதற்குக் காரணம், அவள் எங்கள் தாலாட்டில் வளர்ந்தவள் என்பதனால்தான்.

எழுத்தாக்கம்: **சிவன்**

**(அடுத்த வாரம் புஷ்பவனம் குப்புசாமி)**




"மேடையிலே மைக்டெஸ்ட் பண்ணியது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"ஒன், டூ, த்ரீன்னு சொன்னதும் எல்லோரும் ஓடிட்டாங்க!"

– எஸ். பொருநை பாலு



# கல்கீ




2008 ஜூலை 13
ஸர்வதாரி ஆனி 29
மலர் : 66
இதழ் : 50


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - *பாரதியார்.*

## அக்னி தகிப்பில் அமர்நாத்!

அமர்நாத்ஜி பனிலிங்கமாகக் குளிர்ந்து உறைந்தாலும் அவரைச் சுற்றி அரசியலும் மத உணர்வுகளும் அக்னியாகத் தகிக்கின்றன.

பனிலிங்க தரிசனத்துக்கு வருவோரின் எண்ணிக்கை சமீப ஆண்டுகளில் அதிகரித்துவிட்டதால், வனப்பிரதேசத்தில் நாற்பது ஹெக்டேர் நிலத்தை அமர்நாத் கோயிலின் நிர்வாகத்துக்கு ஒதுக்கித் தந்தது ஜம்மு-காஷ்மீர் அரசு. வனபூமி பிரதேசத்தைப் பிற உபயோகத்துக்கு ஒதுக்கலாகாது என்கிற விதியை உச்சநீதிமன்றம் நினைவூட்ட, 'காஷ்மீர் சிறப்பு அந்தஸ்து உள்ள மாநிலமாதலால் விலக்கு உண்டு' என்று வாதிட்டு, இது செயலாக்கப்பட்டிருக்கிறது! இந்த ஒதுக்கீடு, அம்மாநில முஸ்லிம்களின் உரிமைகளை அச்சுறுத்துவதாக அந்தச் சமூகத்தினர் ஆட்சேபிக்க, காங்கிரஸ் - பி.டி.பி. கூட்டணி அரசிலிருந்து பி.டி.பி. விலகிவிட்டது! காங்கிரஸ் மைனாரிட்டி அரசுக்கு, தனது பெரும்பான்மையை நிரூபிக்கும் கட்டாயம் விளைந்துள்ளது. மத உணர்வுகளால் அரசியல் ஸ்திரத்தன்மை மீண்டும் ஆட்டம் கண்டிருக்கிறது!

காஷ்மீரில் என்றைக்குமே உணர்வுச் சிக்கல்களும் மத ரீதியான பிரிவினை உணர்வும் அதிகம். பாகிஸ்தானிலிருந்து இஸ்லாமிய தீவிரவாத அமைப்புகளின் ஊடுருவல், வன்முறை இரண்டுக்கும் முதல் இலக்கு காஷ்மீர்தான். இவ்வாறிருக்க, காஷ்மீர் அரசாங்கம், அமர்நாத் ஆலயத்துக்கு நிலம் ஒதுக்கும்

வாங்க வாங்க ... உங்க கட்சிக்காரருக்கு நாற்காலி ரெடி

அமைச்சர் பதவி

அணுசக்தி ஒப்பந்தத்துக்கு ஆதரவு

சி.பி.ஐ. விசாரணை

முதல்ல அந்த நாயை இழுத்துக் கட்டிப் போடுங்க அப்புறம் பார்ப்போம்!




பணியை இன்னும் கவனமாகவும் பொறுப்புடனும் கையாண்டிருக்க வேண்டும்.

2000ஆம் ஆண்டில் அமர்நாத் சென்ற 22 யாத்திரிகர்களை, லஷ்கர்-இ-தொய்பா அமைப்பு கொலை செய்தது. இதன் பிறகு அமர்நாத் செல்வது என்பதே ஒரு புனித யாத்திரை என்கிற நிலையிலிருந்து, ஒரு போராளிப் பயணம் என்கிற அந்தஸ்துக்கு மாறிப்போயிருக்கிறது. அமர்நாத்ஜி தரிசனம் என்பதைக் காட்டிலும், ஹிந்து உரிமைப் பிரகடனம் என்பதாகவே இந்த யாத்திரை கருதப்படுவதால், ஹிந்து அடிப் படைவாதிகளுக்கும் முஸ்லிம் தீவிரவாதிகளுக்குமிடையேயான மோதல் களமொன்று இப்புனிதத் தலத்தின் போர்வையில் தழைத்து வருகிறது.

ஜம்மு - காஷ்மீர் அரசு இதனை உணர்ந்திருந்தால், அமர்நாத் ஆலயத்துக்கு நிலம் ஒதுக்கும் பணியை ஆழ்ந்து சிந்தித்து, அனைத்துத் தரப்பினரையும் அரவணைத்து நிறைவேற்றியிருக்கலாம். ஆரம்ப ஆலோசனை நிலையிலேயே மக்கள் ஜனநாயக கட்சி, (பி.டி.பி.)யையும் முஸ்லிம் அமைப்புகளின் தலைவர்களையும் இணைத்துக்கொண்டு அவர்களது ஆதரவைப் பெற்று நிலத்தை ஒதுக்கியிருக்கலாம்.

இப்போது, வேறு வழியின்றி, கொடுத்த நிலத்தைத் திரும்பப் பெற்று, கௌரவமிழந்து நிற்கிறது காஷ்மீர் அரசு. மக்கள் ஜனநாயக கட்சியின் ஆதரவையும் இழந்துவிட்டது. இவையெல்லாம் ஆன பிறகு, சுற்றுலா துறையிடம் நிலத்தை அளித்து யாத்திரிகர்களுக்கு வசதிகள் செய்யப் பணித்துள்ளது இவ்வரசு! இதனை முன்னமே செய்திருக்கலாமே!

சந்தடி சாக்கில், பா.ஜ.க.வும் 'காஷ்மீரில் ஜனாதிபதி ஆட்சி கொண்டுவர வேண்டும்' என்று கேட்பதில் ஆச்சர்யமில்லை. நிலத்தைத் திரும்பப் பெற்றது தவறு என்று ஆர்ப்பாட்டம் செய்வதிலும் வியப்பில்லை.

மதவாத அரசியலும் அடிப்படைவாத ஆட்சியும் ஆரோக்கியமற்றவைதான். ஆனால், அவை காஷ்மீர் போன்ற இடங்களில் வேர்கொண்டுவிட்ட நிலையில், மக்களின் உணர்வு சார்ந்த விவகாரங்களில் நுண்ணுணர்வுடன் இயங்குவது அரசுகளின் பொறுப்பாகிறது. அரசு 'எடுத்தேன் கவிழ்த்தேன்' என்று காரியம் செய்தால், அதன் பின்விளைவுகளால் மக்கள்தான் அவதிப்பட வேண்டியிருக்கிறது.



தில் நடத்தும் சமையல்கூடம் எடுத்துக்காட்டு.

- என்.பாலசுப்பிரமணியன், சென்னை-40

நப்பாசை என்றால் என்ன? என்பதற்கு, தகுதிக்கு மீறி கொள்ளும் தப்பாசைதான் நப்பாசை என விளக்கிய கிரேஸி பதில் - கலக்கல்!

- இந்திரன், நாகர்கோவில் - 32

ஐம்புலன்களையும் ஆண்டவனுக்காக எப்படிச் செயல்படுத்த வேண்டும் என்பதை வேளுக்குடியார் அற்புதமாக விவரித்துள்ளார்.

- பி.ஹேமாம்புஜம், சென்னை - 17

# திரளான முந்திய கலக்கல்

## ரிப்போர்ட் சூப்பர்!

திரளான முந்திய கலக்கல் விஷயங்களை, வருடம் வாரியாகத் தொகுத்துத் தந்திருந்தது சூப்பரோ சூப்பர்!

- சிம்மவாஹினி, வியாசர் காலனி

தி.மு.க. - திமுதிமு வீழ்ச்சி - தொகுப்பு சரி... காங்கிரஸ் - நேரு குடும்பத்தின் கையிலே இருப்பது தெரியலையா? கலைஞர் நெருக்கடியைச் சமாளித்து வெற்றி காண்பார். இதுதான் நடக்கப் போகுது பாருங்கள்.

- என். சண்முகம், திருவண்ணாமலை

விஜயகாந்த், சரத்குமார், டி.ராஜேந்தர் ஆகியோர் அவரவர் மனைவியுடன் 'கூட்டணி' பற்றி பேசும் 'ஜாலி ஸ்டோர்ஸ்' - செம ஜாலி! இதை அவர்கள் படித்துப் பார்த்தால், நிஜமாகவே நீரும் காலி, உஷார்!

- வி.என்.கதிர்வேல், வேலூர் - 6

எப்பவும் தமிழ்நாட்டு மக்கள், உழைப்புக்கு, நேர்மைக்கு உதவுவார்கள் என்பதற்கு, திருநங்கைகள் உக்கடத்

சென்ற வார டிஜிட்டல் கேண்டீனில் ஃபிலிம் இல்லாத சினிமா படித்ததும் பிரமிப்பாக இருந்தது. சினிமாவின் அடுத்த அவதாரம் என்னவோ?

- இரா.முனீஸ்வர சர்மா, கூத்தப்பாக்கம்

'கால் கிலோ காதல், அரை கிலோ கனவு' தொடர், இளமை ததும்பும் ஜிலு, ஜிலு தொடர்தான். அருமையாக இருக்கிறது. 12 வாரங்கள் ஓடியதே தெரியவில்லை!

- மீனா ரெங்கநாதன், சென்னை - 33

இலக்கியப் போர்வையில் சாதியா? எழுத்தாளர்களின் கருத்துகள், படங்கள் எல்லாம் ஓ.கே.தான். புத்தகம் படிப்பது போன்ற அந்த மாடல் பெண் எதுக்குங்காணும்? சதிக்கா?

- சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி

சுப்ரபாரதி மணியன் எழுதிய 'காது வளர்த்தல்', இதுவரை கேட்காத காது கதையாக காதில் ரீங்காரம் செய்துகொண்டே இருக்கிறது.

- சி.என். ரமாதேவி, சென்னை - 83



# தோற்றப் பிழை

## எஸ்.கமலா இந்திரஜித்

**சா**தாரண நாளில்கூட ஏக கூட்டம் அந்த உணவு விடுதியில். பில்லை வாங்கி, கம்பியில் குத்தி, பணத்தை வாங்கிப்போட்டு, சில்லறை எண்ணிக் கொடுத்தே கை வலித்தது அவருக்கு. 'அப்பாடா' என்று உதறி நிமிர்ந்தவர், அந்த கிராமத்தானைக் கண்டார். எளிய தோற்றம். அப்பாவி பாமரக் களை வடிந்தது முகத்தில். தலையைச் சொறிந்துகொண்டே நின்றவனைப் பார்த்து,

''என்ன விஷயம்?'' என்றார் அதட்டலாய்.

''வந்துங்க...!'' என்று இழுத்தான்.

''கடன் கேஸா?''

''இல்ல வந்து...''

''நாசமாப் போச்சு, கைல பணமில்லாம வந்து மூச்சுமுட்ட கொட்டிக்க வேண்டியது. அப்புறம் தலையைச் சொறிய வேண்டியது. இதே பொழப்பாப் போச்சு. ச்சை!'' என்று சப்தமாய்க் கத்த ஆரம்பிக்கும்போதே மேசையைச் சுற்றி நான்கைந்து பேர், பில்லும் பணமுமாய் கூட ஆரம்பித்தார்கள்.

''கொஞ்சம் உள்ளார வாங்க. சங்கதி சொல்லணும்!'' என்றான் கிராமத்து ஆசாமி இழுத்தவாறு.

''துரைக்கு அவ்வளவு வெக்கமா இருக்கோ? நாலு பேருக்கு எதுக்கக் கேட்டா அவமானமா இருக்கா? அத்தனை மானஸ்தன், காசு இருக்கா, இல்லையான்னு பாத்துட்டுல்ல சாப்பிடணும்?''

''அதெல்லாம் இல்லீங்க. கொஞ்சம் உள்ற வந்தீங்கன்னா...'' என்றான் கெஞ்சலாக.

''என்னா, சம்பந்தம் பேசப் போறவனாட்டம் உள்ற வாங்க, உள்றவாங்கன்னுகிட்டு இருக்க?'' என்று சொல்லி வேண்டா வெறுப்பாக கல்லாவைப் பூட்டிவிட்டு, பின்னால் திரையை ஒதுக்கி உள் அறைக்குப் போனார். கூடவே சென்றான் அந்த ஆசாமியும்.

வந்தவன் சுற்றும் முற்றும் பார்த்தான். ஒருவருமில்லை. தன் வலது உள்ளங்கையைப் பிரித்தான்.

''வத்தக் குழம்பு பிசையும்போது இது தட்டுப்பட்டது. நல்லவேளை யாரும் கவனிக்கலை. அங்க எல்லார்க்கும் தெரிஞ்சா அசிங்கமாப் போயிடும். உங்க ஓட்டல் பேரு கெட்டுடுமேன்னுதான் தனியா கூப்பிட்டேன். மத்தபடி, சாப்பிட்ட பில்லுக்குப் பணமெல்லாம் பத்திரமா வச்சிருக்கேன்'' என்றான்.

அவன் உள்ளங்கையில், கரப்பான் பூச்சி ஒன்று குழம்பில் வெந்து வத்தலாய்க் கிடந்தது. நாராயணனுக்கு வியர்த்துக் கொட்டியது. அவன் கையைப் பிடித்து மன்னிப்பு கேட்க வேண்டும்போல் இருந்தது. ஆனால், அவன் அதையெல்லாம் எதிர்பாராமல் சட்டெனத் திரும்பிச் சென்று, மேசைமீது பில்லையும் உரிய பணத்தையும் வைத்துவிட்டு, போய்க்கொண்டே இருந்தான். ●

# அப்பாவை வாசிக்கிறவன்

**'ஒரு மூட்டை புத்தகம் கிடைத்தால் என்னையும் விற்றுவிடுவார்'**

***– தமது 'அப்பாவின் உலகம்' என்ற கவிதையில் நா. முத்துக்குமார் எழுதிய வரிகள் இவை. அந்த உலகத்தின் ஜன்னலை அவர் இலேசாகத் திறந்து காட்டுகிறார் இந்தப் பேட்டியில்.***

''எங்கள் இல்லத்தில் கிட்டத்தட்ட ஒரு லட்சம் புத்தகங்கள் இருக்கின்றன. புத்தகங்களின் மேல் இப்படி எனக்கு ஒரு அலாதியான ஈர்ப்பு வருவதற்கு முழு காரணமும் என் தந்தைதான். என் தந்தை செவ்வாப்பேட்டை அரசினர் ஆண்கள் மேல்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றியவர். அவரது தமிழ் அறிவும், புத்தகம் படிப்பதில் அவருக்கு இருந்த ஆர்வமும் ரொம்பவே பிரமிக்க வைக்கும் ஒரு விஷயம். தாம் எட்டாம் வகுப்பு படிக்கும்பொழுதிலிருந்தே அவர் புத்தகங்களைச் சேகரிக்க ஆரம்பித்துவிட்டார்! அவருக்குப் புத்தகங்களின்மீது எப்படி அலாதி ஆர்வம் வந்ததென்று தெரியாது. ஆனால், அவர் அப்பொழுதே சுமார், ஆயிரம் புத்தகங்களைச் சேகரித்து வைத்திருந்தாராம். இத்தனைக்கும் ரொம்ப பண வசதி இல்லாத குடும்பத்தில் பிறந்தவர் அவர். யாராவது எங்காவது புத்தகத்தை விற்கப் போகிறார்கள் அல்லது கொடுக்கப் போகிறார்கள் எனத் தெரிந்துவிட்டாலே போதும், தமது சைக்கிளை எடுத்துக்கொண்டு அங்கே சென்று புத்தகங்களை வாங்கி வந்துவிடுவாராம் அவர். தாம் சேகரித்த புத்தகங்களை வைத்தே 'அன்னை புத்தக நிலையம்' என்ற ஒரு நூலகத்தை நடத்தி வந்தார் என் அப்பா. கிட்டத்தட்ட 40 ஆண்டு காலம் அந்த இலவச நூலகம் இயங்கியது. தமது நூலகத்தில் உள்ள நூல்களை எல்லாம் பல பள்ளிகளுக்கும் பொது இடங்களுக்கும் எடுத்துச் சென்று, பொது மக்களின் பார்வைக்கு வைப்பார் அப்பா.

எங்க வீட்ல எல்லா இதழ்களோட முதல் பிரதியும் இருக்கும். சங்க இலக்கியங்கள் தொடங்கி, பல சிற்றிதழ்கள்னு ஏகப்பட்ட புத்தகங்களோடு எங்களை வளர்த்தார் அப்பா. தாம் படித்த புத்தகங்களிலெல்லாம் அங்கங்கே கோடு போட்டு வைப்பார். 'புத்தக வரிகளுக்கு நடுவில் ஏன் இப்படிக் கோடு வரைகிறீர்கள்?' எனக் கேட்டால், 'அழகான, அழுத்தமான வரிகளுக்குக் கீழே கோடு போடுவது, எங்கேயோ இருக்கும் அந்த எழுத்தாளருக்கு இங்கிருந்தே பாராட்டு தெரிவிப்பதற்கு சமம்' என்பார்.

நான் மூன்றாவது வகுப்பை எட்டும் பொழுதே சிறுவர் இலக்கிய நூல்கள் படிப்பேன். மெல்ல கவிதைகளும் எழுத ஆரம்பித்துவிட்டேன். நான் பத்தாம் வகுப்பு படிக்கும்பொழுது, எனது கவிதைகளை 'தூசிகள்' என்ற தலைப்பில், 5,000 ரூபாய் கடன் வாங்கி வெளியிட்டார் என் அப்பா.

'நல்ல காலம் எனக்குத் தமிழ் மட்டும்தான் தெரியும். அதனால நாம் கடனாளியா இருக்கோம். எனக்கு ஆங்கிலமும் தெரிந்திருந்தால், ஆங்கிலப் புத்தகங்களும் வாங்கிக் குவிச்சுடுவேன். அப்புறம் நாம் நடுத்தெருவுலதான் நின்றிருப்போம்' என்பார். நாங்க வளரும்பொழுதே எங்கப்பாவோட புத்தக சேகரிப்பும் வளர்ந்து, ஒரு லட்சம் புத்தகங்களா பெருகி இருந்தது. ஒவ்வொரு கால கட்டத்திலேயும் என்னை ஒவ்வொரு புத்தகம் பாதிச்சிருக்கு. நான்



**அழகான, அழுத்தமான வரிகளுக்குக் கீழே கோடு போடுவது, எங்கேயோ இருக்கும் அந்த எழுத்தாளருக்கு இங்கிருந்தே பாராட்டு தெரிவிப்பதற்கு சமம்.**

ஐந்தாம் வகுப்பு படிக்கும்பொழுது, ரஷ்ய இலக்கிய நூல்கள் என்னைப் பெரிதும் கவர்ந்தன. குறிப்பாக, மாக்ஸிம் கார்கி எழுதிய 'தாய்'. நான் ப்ளஸ் 2 படிக்கும்பொழுது தி.ஜானகிராமனின் 'மோக முள்' மற்றும் சுந்தரராமசாமியின் 'புளிய மரத்தின் கதை', லா.ச.ரா.வின் 'அபிதா' என்னைப் பாதித்துள்ளன.

வண்ணதாசனின் கவிதைகளைப் படித்தால் உலகை நேசிக்கக் கற்றுக்கொள்வோம். கம்யூனிசம் சார்ந்த புத்தகங்களைப் படித்தால் இந்தச் சமூகத்தில் உள்ள அவலங்களை நினைத்துக் கோபம் வரும். ஓஷோ, ஜே.கே இவர்களின் புத்தகங்களைப் படித்தால் தத்துவ ரீதியாக உலகைப் பார்க்கத் தோன்றும். நம் மனத்தைச் சஞ்சலமற்ற நீரோடை போல ஆக்கி விடக் கூடிய சக்தி புத்தகங்களுக்கு உள்ளன.

என் தந்தை என்னைப் பார்க்க வரும் போதெல்லாம் 15, 20 புத்தகங்களோடுதான் வருவார். புத்தகங்களுக்காக அப்பா வாங்கிய 50,000 ரூபாய் கடனை, அவர் இறந்த பின்தான் அடைத்தேன். இதோ அந்த மாபெரும் பொக்கிஷங்களை எல்லாம் ஒன்று திரட்டி, சென்னையில் ஆய்வுக் கூடம் தொடங்க இருக்கிறோம். என் தந்தைக்கு நாங்கள் செய்யும் புத்தகாஞ்சலி அதுதான்'' என்கிறார் கவிஞர் நா.முத்துக்குமார்.

– நளினி சம்பத்குமார்

**- கவிஞர் நா. முத்துக்குமார் நேர்காணல்**

## வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன் சுவாமிகள்

# நெஞ்சசு வீதியில் கொஞ்சும் குளம்பொலி!

பெருமானுக்கு எப்போதுமே பூமிப் பிராட்டியிடத்தில் காதல் அதிகம். ஸ்ரீதேவி நாச்சியாருக்கு, தன் திருமார்பின் மூலையில் ஓர் இடத்தைக் கொடுத்து விட்டு, போதும் என்று ஆக்கி வைத்தான். ஆனால், அவன் கிடப்பதும், இருப்பதும், நிற்பதும், வராஹ பெருமானாக இடர்ந்து எடுப்பதும், திரிவிக்கிரமாவதாரத்தில் தன் திருவடிகளால் அளப்பதும் அந்த பூமிப் பிராட்டியைத்தானே!

இது குறித்து ஸ்ரீதேவி நாச்சியாருக்குச் சிறு குறை இருந்ததாம்! துர்வாசர் ஸ்ரீ தேவி தாயாரைச் சந்திக்கச் சென்றபோது, அவரிடம் தனது குறையை வெளியிட்டிருக்கிறாள். முனிவர், ''கவலை வேண்டாம்; நான் ஆவன செய்கிறேன்'' என்று உறுதி கூறிவிட்டுக் கிளம்பினார்.

பூமிப்பிராட்டியைப் பார்க்கச் சென்றார் துர்வாஸர். ஓர் இரண்டு நிமிடங்களுக்கு அவர் வந்ததைக் கவனியாமல் இருந்து விட்டாள் பிராட்டி. உடனே கோபம் ஏற்பட்டு, ''ஸ்ரீதேவி நாச்சியாருடைய திருமேனி போலவே உன் உடலும் ஆகட்டும்'' என்று சபித்துவிட்டார்!

சிவந்த திருமேனி படைத்தவள் மஹாலக்ஷ்மியான ஸ்ரீதேவி நாச்சியார். கரும் பச்சை வண்ணத்தவள் பூமிப்பிராட்டி! அந்தக் கரும்பச்சை வண்ணத்தின் பேரில் தான் பெருமாளுக்குக் காதல். சிவந்த வண்ணத்தைக் காட்டிலும் இந்தப் பச்சை வண்ணத்தை அதிகம் நேசித்தான். அந்தத் திருமேனி பறிபோய்விடுமே என்றும் பெருமாளுக்குத் தன் பேரில் காதல் குறைந்துவிடுமே என்றும் பூமிப் பிராட்டி பயந்தாள். துர்வாஸரிடமே தன் கரும்பச்சை வண்ணத்தைத் திரும்பப் பெற வழி கேட்டாள்.

அப்போது துர்வாஸர், ''தென் திருப் பேரை என்ற திருத்தலத்தில் போய்த் தவம் செய்தால், பழைய திருமேனி வர்ணத்தை மீண்டும் நீ பெறலாம்'' என்றார். பூமிப் பிராட்டியும் இங்கே வந்து சேர்ந்து தவம் புரிந்து தன் மேனி வண்ணம் மீளப் பெற்றாள்.

நாம் அடுத்து கண்ணனைத் தேடி வந்துள்ள தென்திருப்பேரை திவ்ய தேசத் துக்குப் பெயர் கொடுத்தவள் பூதேவி நாச்சியார்தான். திரு என்றாலே ஸ்ரீதேவி-லக்ஷ்மி-யைக் குறிக்கும். பேரம் என்றால் உடல் - சரீரம். திருவான மஹாலக்ஷ்மியின் உடலை பூமிப்பிராட்டி பெற்றதால் திருப்பேரை என்றே பெயர் பெற்றாள். அவள் தவம் செய்த திவ்ய தேசம் அவளது பெயராலேயே வழங்கப்படுகிறது. ஸ்ரீரங் கத்துக்கு அருகே ஏற்கெனவே ஒரு திருப் பேரை இருப்பதால், அதற்குத் தெற்காக அமைந்துள்ள இத்திருப்பேரை தென் திருப்பேரை ஆயிற்று!

திருப்பேரை நாச்சியார், தனது பெயரை ஏற்ற ஊரிலே தவமியற்றிக் கொண்டிருந்தாள். அப்போது ஒரு நாள் இங்குள்ள புஷ்கரணியில் நீராடியபோது, அதிலே இரண்டு மிக நீண்ட காது காப்பு

# கண்ணனைத் தேடி...






கள் (ஆபரணம்) தோன்றின. அவை மகரம் என்னும் மீன் வடிவிலே இருந்தன. இந்த மகரநெடுங்குழை ஆபரணத்தைத் தந்த புஷ்கரணிக்கு மத்ஸ்ய புஷ்கரணி என்றே பெயர் (மத்ஸ்யம்-மீன்).

அழகான மகரநெடுங்குழைகளை யாருக்குச் சாற்றலாம் என்று பூதேவி நாச்சியார் பார்த்தபோது, எம்பெருமானே அவள் முன் தோன்றி, ''இந்தக் குழைகள் என் செவிகளுக்கே ஏற்றவை'' என்று அவற்றைத் தரித்துக் கொண்டான்.

இன்றைக்கும் அந்த அழகான மகரநெடுங் குழையணிந்த செவிகளோடு தான் தென் திருப்பேரையில் உத்ஸவ எம்பெருமான் காட்சி தருகிறான். மூலமூர்த்தி மகர நெடுங்குழைக்காதர் என்ற திருநாமத்துடனும் ஸேவை சாதிக்கிறான். மூல மூர்த்தி அமர்ந்த திருக்கோலத்தில் சௌந்தர்ய ஸ்வரூபமாகக் காட்சி தருகிறார். உத்ஸவர் ஸ்ரீதேவி, பூதேவியுடன் இத்திருத்தலத்தின் பெயரைத் தாங்கிய தென் திருப்பேரை நாச்சியாருடனும் குழைக்காத நாச்சியாருடனும், நான்கு நாச்சிமார்கள் சூழ அழகே வடிவமாகக் காட்சி தருகிறான்.

நம்மாழ்வாரை ஆட்கொண்ட நவ திருப்பதி எம்பெருமான்களுள் ஒருவர் இந்த மகரநெடுங்குழைக்காதர். இத்திருத்

தலத்தில் ஆழ்வாருக்கு அவர் வெளிப் படுத்திய குணம் சௌந்தர்யம். தன் பூரண அழகைக் காட்டி அவரை வசப்படுத் திக்கொண்டான்!

ஆழ்வாருக்கு என்ன நிகழ்ந்தது என்று பார்ப்போம்.

எம்பெருமானின் சௌந்தர்யத்துக்கு வசப்பட்ட நாயகியான ஆழ்வார், தமது உற்றார் - உறவினரையெல்லாம் விட்டு விட்டு இங்கே வந்துவிட்டார். அவருடைய கண்கள் என்ன செய்தனவென்றால், ''நாங்கள் போய் ஒரு நிமிடம் பகவானை தரிசனம் செய்துவிட்டு வருகிறோம்'' என்று புறப்பட்டன. ''நீர் இங்கேயே இரும்'' என்று ஊருக்கு வெளியே ஆழ்வாரை அமர்த்திவிட்டுச் சென்றன. ஆனால், பகவானிடம் போனதும் அவை தோற்றுப் போய்விட்டன! அவன் அழகைப் பருகிக் கொண்டு அங்கேயே இருந்துவிட்டன!

''கண் நம்மை விட்டுவிட்டுப் போய் விட்டது பார்த்தாயா? நீயாவது உதவு'' என்று ஆழ்வார் தம் காதுகளிடம் கேட்டார். ''கவலைப்பட வேண்டாம்; நான் போய்ப் பெருமானிடத்திலே சொல்லி, கண்ணை யும் மீட்டு வருகிறேன்'' என்று வீராப் பாகக் காது புறப்பட்டுப் போயிற்று. கண்ணாவது இரண்டு நிமிஷம் கழித்து தோற்றது. காதோ அவன் பெருமை யிலே முதல் நிமிஷமே தோற்றுப் போயிற்று!

இப்படியே ஒவ்வொரு புலனாக, பெருமானிருக்கும் இடம் நோக்கிப் போய், ஒன்றுமே அவனைத் தாண்டி திரும்பி வரவில்லை. ஆழ்வாரிடத்திலே மனம் மட்டும் இன்னும் மிச்சமிருந்தது.

மனம் பேசிற்று: ''இந்த ஐம்புலன்களும் வீண்! இவர்களால் நமக்கு உதவி இல்லை. நம்முடைய கட்சியை அவர்கள் எம்பெரு மானிடத்திலே எடுத்துப் பேசியிருக்க வேண்டாமோ? நான் போய் பேசி, அவர்களையும் மீட்டுக்கொண்டு வரு கிறேன்'' என்று சொல்லிவிட்டுப் போயிற்று... கண், காது, மூக்கு, வாயாவது எங்கே என்று தெரிந்ததாம். ஆனால், மனம் என்பது கண்ணுக்கே தெரியாததாயிற்றே. பெருமானுடைய திருவடிக்குக் கீழே போய் விழுந்து அணைந்தே போய் விட்டது! ஆழ்வார் தனித்து விடப்பட்டார். ஒரு வீரனை நாம் ஜெயிக்க வேண்டு மானால், அவனுடைய தேரை உடைத்து, கவசத்தை முறித்து, கிரீடத்தைச் சாய்த்து, கடைசியில் அவனை வீழ்த்துகிற மாதிரி, பெருமான் நம்மை ஆட்கொள்கிறபோது, முதலில் நம் புலன்களைத் தனதாக்கிக் கொள்கிறான்; அவை இருந்தால்தானே நம்மால் எதிர்க்க முடியும்? அதன்பின் நம் மனத்தையும் வசப்படுத்திக்கொள்கிறான். இவ்விஷயத்தை தம் பாடலில் 'இமுந்த எம்மாமை சிறத்துப் போன என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார்', என்று கூறுகிறார்.

அப்படி வகுள மாலை தரித்த நம்மாழ்வாரை ஆட்கொண்டான் எம் பெருமான். இத்திருத்தலத்தில் வகுள மரம் இருக்கிறது; தல விருக்ஷமான வில்வ மரமும் இருக்கிறது. பெருமானுக்கு நேர் எதிரே இருக்க வேண்டிய கருடாழ்வார் சற்று ஒதுங்கிக் காட்சியளிக்கிறார்.

**கண்ணாவது இரண்டு நிமிஷம் கழித்து தோற்றது. காதோ அவன் பெருமையிலே முதல் நிமிஷமே தோற்றுப் போயிற்று**

எம்பெருமானே அவரை அவ்வாறு ஒதுங்கி இருக்கச் சொன்னானாம். இவ் வூரில் வேதம் ஓதுகிற ஒலியும் விழாக்களின் ஒலியும், பிள்ளைகள் விளையாடுகிற ஒலியும் விடாமல் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும் என்பது அவன் விருப்பம். எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு நேரே வாசலில் பிள்ளை கள் கூடி விளையாடிக் கொண்டிருந்தார் களாம். கருடன் அவர்களை மறைக் கிறாற்போல் நடுவிலே இருந்ததால்,



அவரைத் தள்ளி இருக்கும்படி பணித்தான் எம்பெருமான். இப்போதும் அப்படியே இருக்கிறான் கருடன்.

'வேத ஒலியும், விழா ஒலியும், பிள்ளைக் குழா விளையாட்டொலியும் அறா' (அறா - மாறாத) திவ்யதேசம் தென்திருப்பேரை. அதேபோல இங்கே எம்பெருமான் கருடோத்ஸவம் கண்டருள்கின்ற குளம்பின் ஒலி (திருவடி ஓசை)யானது, நம்மாழ்வாரின் நெஞ்சகத்தில் ஒலித்துக்கொண்டே இருக்கிறதாம்!



**"நீங்கள் எல்லோரும் என் அருகிலே வாருங்கள். என் நெஞ்சத்திலே உங்கள் காதை வைத்துக் கேளுங்கள். கருடனுடைய கால்களின் ஒலி 'கள கள'வென்று உங்கள் காதுகளிலே விழுகிறதா...?"**

*வெள்ளைச் சுரி சங்கொடு ஆழி ஏந்தி,*
*தாமரைக் கண்ணன் என்*
*நெஞ்சினூடே*
*புள்ளைக் கடாகின்ற ஆற்றைக் காணீர்;*
*என் சொல்லிச் சொல்லுகேன்,*
*அன்னைமீர்காள்?*

புள் என்றால் பறவை. இங்கு கருடனைக் குறிக்கும். பெருமான் கருடவாகனத்திலே ஏறி, ஆழ்வாருடைய நெஞ்சகத்திலேயே பெரிய புறப்பாடு கண்டருள்கிறானாம்!

வீதியிலே புறப்பாடு நடந்து கேள்விப்பட்டிருக்கிறோம். வேகமாக, பெருமானுக்கு இப்படியும் அப்படியும் ஏசல் நடத்தியும் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால், 'யாருடைய நெஞ்சகத்திலாவது பெருமானாலே புக முடியுமோ? புகுந்து அங்கே கருட வாகனத்தோடு புறப்பாடு கண்டருள முடியுமோ? அதற்கு எவ்வளவு பெரிய தெரு தேவை?!' என்று நமக்குத் தோன்றும்.

ஆனால், பெருமான் தன்னுடைய பரம பதத்தைப் பெரிய இடமாகக் கருதுவது கிடையாது; தன் திருப்பாற்கடலைப் பெரிய இடமாகக் கருதுவதில்லை. சூரிய மண்டலத்தைக்கூடத் தன் ஸ்தானமாகக் கருதுவதில்லை. 'நெஞ்சமே நீள் நகராக இருந்த என் தஞ்சனே' என்று ஆழ்வார் பாசுரத்திலே சாதிப்பதுபோல், தூய பக்தர்களின் நெஞ்சத்தைத் தன் வாசஸ்தலமாகக் கொண்டிருக்கிறான். அந்தச் சிறிய இடத்தையே பெரிய தெருவாகக் கொண்டு கருடோத்ஸவமே கண்டருள்கிறான். அதனால்தான் ஆழ்வார் சொல்கிறார்: "நீங்கள் எல்லோரும் என் அருகிலே வாருங்கள். என் நெஞ்சத்திலே உங்கள் காதை வைத்துக் கேளுங்கள். கருடனுடைய கால்களின் ஒலி 'கள கள'வென்று உங்கள் காதுகளிலே விழுகிறதா...?" என்று கேட்கிறார்! அவருக்குத்தான் எவ்வளவு மகத்தான நம்பிக்கை, பக்தி.

அந்த பக்தியும் நம்பிக்கையும் ஒரு துளியாவது நமக்கு அருளும்படி தென் திருப்பேரை மகரநெடுங்குழைக்காதரை வேண்டுவோம்.

**(தேடுவோம்)**

படங்கள் : **ஸ்ரீஹரி**

சித்திரங்கள் : **வேதா**

# கற்பனை

**ப**த்து டாக்டர்களிடம் போய் சிகிச்சை எடுத்துக்கொண்டும் பலன் இல்லையாம்; அந்தப் பத்து டாக்டர்களின் பெயர்ப் பட்டியலோடு வந்தவருக்கு, வயது 55 இருக்கும். வசதியானவராகத் தெரிந்தது. கூட நிறையப் பேர் வந்திருந்தனர்.

''ஐயோ டாக்டர், என் வயிற்றில் புண். வலி தாங்கலே. எதைச் சாப்பிட்டாலும் வலி அதிகமாகுது. ஏதாவது செய்யுங்க'' என்று கதறினார்.

அந்தப் பெயர்ப் பட்டியலில் திறமைசாலிகளும் இருந்தார்கள்; பிரபலமானவர்களும் இருந்தார்கள். ஆக, ஒன்று தெரிந்துவிட்டது. பன்னிரண்டாவது டாக்டரிடம் இவர் ஒப்பிக்கப் போகும் பட்டியலில் என்பெயரும் இருக்க வாய்ப்பு உண்டு!




இவர் வயிற்றில் அப்படி என்னதான் மர்மம்? எண்டோஸ்கோபி சோதனை செய்து பார்த்ததில் ஆச்சரியம் காத்திருந்தது. அவர் குடலில் ஒரு பிரச்னையும் இல்லை...! சொல்லப்போனால் ஓர் இளைஞனின் குடல் போல 'கிண்' என்று இருந்தது.

குடலில் பிரச்னை என்று வருபவர்களில் 80 சதவிகிதம் பேருக்கு உண்மையான பிரச்னை எதில் தெரியுமா? மனதில்! பட்டியல் போட்டவருக்கும் கோளாறு குடலில் இல்லை. மனதில்தான்.

அவரிடம் பலவிதமாகப் பேசிப் பார்த்ததில் விவரம் புரிந்தது. 'ஏதாவது நோய் காரணமாக, தான் படுத்தபடுக்கை ஆகிவிட்டால் என்ன செய்வது?' என்ற பயம், அவரை ஆட்டிப் படைத்து வருகிறது. அந்தப் பயமே தொடர்ந்து ஆழ் மனதில் புகுந்துவிட, அதை வெளிப்படுத்தினால் பிறர் அலட்சியம் செய்வார்களோ என்ற தவிப்பு. இந்தச் சூழலில் தனக்கு வயிற்றுக் கோளாறு இருப்பதாகக் கற்பனை செய்துகொண்டு அவரே நம்பவும் தொடங்கிவிட்டார்.

அவரை உட்கார வைத்துக்கொண்டு அரை மணி நேரம் கவுன்சிலிங் செய்தேன். ''இல்லாத மேடையில் எழுதாத நாடகத்தில் பங்கேற்பது என்பார்களே, அந்த மாதிரிதான் உங்கள் செய்கையும் இருக்கிறது. உண்மையை எதிர்கொள்ளத் தயாராகுங்கள். உங்களுக்கு வயிற்றுப் பகுதியில் எந்தக் கோளாறும் இல்லை. எனவே இதை மருந்துகளால் குணப்படுத்த முடியாது. இதைச் சரிசெய்ய வேண்டியது நாங்கள் அல்ல. நீங்களாகவேதான் சரி செய்து

கொள்ள வேண்டும். முதலில் உண்மையை ஒப்புக்கொள்ளும் பக்குவத்தை வளர்த்துக் கொள்ளுங்கள்'' என்றேன்.

ஆசாமி மெல்ல மெல்ல வழிக்கு வந்தார். நோயினால் படுக்கையில் விழுந்து விடுவோமோ என்பதைத் தவிர, வீட்டில் தனது முக்கியத்துவம் குறைந்து வருவதாக அவருக்கு ஓர் எண்ணம். எனவே, உடம்பு



# நோய்!

நியூ டேஸ்ட்டி ட்ரீட் - 14

டாக்டர் எஸ். ராஜேந்திரன்

சரியில்லை என்று நாடகமாடி, மற்றவர்கள் கவனத்தை ஈர்க்க முயற்சித்திருக்கிறார். அதில் வெற்றியும் கிடைத்திருக்கிறது. ஆனால், ராஜா வேஷம் கட்டியவன், திரை விழுந்த பிறகும் தன்னை ராஜாவாகவே நினைத்துக்கொண்டால் எப்படி?

அவர் மனத்தில் மெல்ல மெல்ல நம்பிக்கை விதைகளை விதைத்தேன். மனம் சரியானவுடன், அவர் கற்பனையில் தோன்றியிருந்த வயிற்றுப் புண்கள் மாயமாக மறைந்துவிட்டன.

**ம**னதுக்கும் ஜீரணத்துக்கும் உள்ள தொடர்பை முழுவதுமாக அறிவியல் இன்னும் விளக்கவில்லை. ஆனால், சிலவற்றைத் தெளிவுபடுத்தியிருக்கிறது. பயமும் அதிர்ச்சியும் உண்டாகும்போது அட்ரினலின் அதிகமாகச் சுரக்கிறது. சந்தோஷம் மிக அதிகமாகும்போது, என்டார்ஃபீன் என்ற ஹார்மோன் அதிகமாகச் சுரக்கிறது. ஆக, உணர்வுகளுக்கும் ஹார்மோன் சுரக்கும் அளவுக்கும் நிச்சயம் தொடர்பு இருக்கிறது.

மன அழுத்தம் உண்டாகும்போது அஜீரணம் ஏற்படுவது சகஜம். மன உளைச்சலுக்கு ஆளானவர்களுக்கு மலச்சிக்கல் ஏற்படவும், மிக அதீத சுறுசுறுப்பு, படபடப்பாக (ஹைப்பர்-ஆக்டிவ்) இருப்பவர்களுக்கு லூஸ்மோஷன் ஏற்படவும் வாய்ப்பு அதிகம்.

ஆக, வயிற்றுப் புண், வயிற்றுவலி போன்ற கோளாறுகள் ஏற்பட்டால், முதலில் உங்கள் மனநிலையைச் சீரமைத்துக் கொள்ள முயற்சி செய்யுங்கள். கூடவே மணத்தக்காளி, மோர், இளநீர், தேங்காய்ப் பால், வெந்தயம் போன்ற இயல்பான உணவுப் பொருள்கள் வயிற்றுப் பிரச்னைக்கு மிக நல்லது. உணவும் மனமும் சரியாகயிருந்தால் உடல் நலமாக இருக்கும்.

**(தொடரும்)**

எழுத்து வடிவம்: **ஆதர்ஷ்**






இருவாரங்களுக்கு முன்பு பங்களா தேஷில் நடந்த கிட்பிளை கோப்பையின் போது, டோனியிடம் ஆட்டப் பளு பற்றி கேள்வி கேட்கப்பட்டது. கடந்த ஒருவருட மாக டோனி இல்லாமல் இந்தியா ஒரு ஆட்டத்தில்கூட பங்கேற்கவில்லை. சச்சின் முதல் கம்பீர் வரை எல் லோரும் இந்த இடைப்பட்ட காலத் தில் ஓய்வு எடுத்துவிட்டார்கள். ஆனால், டோனிக்கு ஓய்வு அவசியம் என்பதை பி.சி.சி.ஐ உணர மறுத்தது.

# காதலித்தால்

டோனியும் எந்த ஒரு சத்தமும் எழுப்பவில்லை. ஐ.பி.எல் ஆட்டங்களில் ஒன்றைக்கூட டோனி ஏன் விட்டு வைக்கவில்லை?

'ஆமாம், எனக்குச் சோர்வாக இருக்கிறது என்கிற உண்மையைப் போட்டு உடைக்கவில்லை. இடைவிடாது ஆடுவதெல்லாம் சகஜம்தானே. கிரிக்கெட்டை நீங்கள் காதலிக்கும்போது சோர்வு சுமையாக மாறாது. கிரிக்கெட்டுக்கு நீங்கள் அடிமையாக இருக்கும்போது எதுவும் பாரமில்லை' என்று லெக்சர் கொடுத்தார். அவ்வாறு அவர் மொழிந்து ஒருவாரம் ஆக வில்லை. ஆசியா கோப்பையில் பங்களாதேஷுடனான போட்டியில் இந் தியர்கள் எதிரணியினர் அடித்த பந்துகளை பவுண்டரிக்கு அனுப் புவதிலேயே மும்முரமாக இருந்தனர். அதாவது ஃபீல்டிங் செய்யும்போது கேட்சைக்கூட அவர்கள் ஏற்கவில்லை. இந்தப் போக்கு குறித்து டோனி யிடம் கேட்டதற்கு, 'வீரர்கள் சோர்வாக இருக்கிறார்கள். இதனால்தான் அவர்களால் முனைப்பாக ஆட முடியவில்லை. கடந்த 84 மணி நேரங்களில் 36 மணி நேரம் நாங்கள் கிரிக்கெட் ஆடியிருக்கிறோம். ஆட்ட அட்டவணைகளை இப்படி அமைத்தது எனக்குப் பிடிக்க வில்லை' - இவ்வாறாக தாட்பூட்டென்று குதித்தார்.

**ஐ.பி.எல்** கோப்பையில் சென்னை அணியின் கேப்டனாக மொத்தம் பதினாறு ஆட்டங்கள் ஆடினார் டோனி. ஒன்றரை மாதங்களாக ஏழு ஊர்களுக்கு மாறி மாறிப் பயணம். இதற்கிடையே சென்னையில் லக்ஷ்மிராயுடன் நாள்தோறும் பைக்கில் உலா. அரை இறுதி, இறுதி ஆட்டங்களை அடுத்

**ச.ந. கண்ணன்**

தடுத்த நாட்களில் ஆட வேண்டிய கட்டாயமும் இறுதியில் ஏற்பட்டது. அப்போதெல்லாம் டோனியிட மிருந்து சிறு முனகலும் எழவில்லை. ஆனால், இந்திய அணிக்காக ஆறு ஆட்டங்கள் ஆடுவதற்குள், அவருக்கும் அவரு டைய அணிக்கும் அலுப்பு வந்துவிட்டது. அதுவும் 'தொடர் ஆட்டங்களினால்தான் எங்களால் ஒழுங்காக ஃபீல்டிங் செய்யமுடிய வில்லை' என்று புதுக் குற்றச்சாட்டு வேறு. ஆசிய கோப்பை ஆட்டங் களின் அட்டவணை முன்கூட்டியே வழங்கப்பட்ட நிலையில், கேப்டனாக இருக்கும் டோனி, அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்திருக்க வேண்டாமா? தான் உள்பட யார் யாருக்கு ஓய்வு தேவை என்று ஒரு பட்டியல் தயார் செய்திருக்க வேண்டும். ஆசியக் கோப்பைக்குப் பிறகு முக்கியமான



# பாரமில்லை!

தொடர்கள் வரவிருப்பதால், முன்யோசனையோடு செயல்பட்டிருக்க வேண்டும். டோனி முழுதாகப் பக்குவப்படவில்லை என்றே இச்சம்பவம் உணர்த்துகிறது.

'ஐ.பி.எல் ஆட்டங்களின்போது யாரும் ஆட்சேபனை எழுப்பவில்லையே' என்று, டோனியை நோக்கி கேள்வி எழுப்பியுள்ளது பி.சி.சி.ஐ, முதல்முறையாக. 'சச்சின் தன்னுடைய குறைகளைச் சொல்லி ஓய்வெடுத்துக்கொண்டதுபோல ஏன் டோனி செய்யவில்லை?' என்கிற துணைக் கேள்வி ஒன்றும் வந்து விழுந்திருக்கிறது.

**ச**ச்சின் இல்லாமல் இந்தியா தொடர்ந்து ஆடி வருவதும், சர்வ சாதாரணமாக முன்னூறு ரன்கள் குவிப்பதும் முக்கியமாக, நல்ல தொடக்க ஆட்டக்காரர்கள் அமைந் திருப்பதும் சமீப காலத்தில் ஏற்பட்டுள்ள அதிரடி மாற்றங்கள். இது ஒரு நல்ல தொடக்கம். ரைனா, கம்பீர் போன்ற வீரர் களை இத்தனை நாட்களாகப் பூட்டி வைத்து, அவர்களுக்குண்டான வாய்ப்பு களை அளிக்கத் தவறிவிட்டோம். இளைஞர் களுக்கு வாய்ப்பு கொடுங்கள் என்று இந்தியா வின் முன்னாள் பயிற்சியாளர் சேப்பல், தொண்டைத் தண்ணி வற்றப் பேசினார். குறிப்பாக, ரைனா, டோனிமீது அதிக நம் பிக்கை வைத்தார். என்ன செய்வது, தும்பை விட்டு வாலைப் பிடிப்பது இந்திய அணி யின் இயல்பாயிற்றே!



     

# நக்கை பரத்வாஜ்

**மேஷம்** : திறமைக்குப் பெயர் போன மேஷ ராசிக்காரர்களே! பண வரவு திடீரென கூட வாய்ப்புண்டு. தாம்பத்ய உறவு இந்த வாரம் சூப்பரோ சூப்பர். அதற்குக் காரணம் உங்க சூழல்ல சொத்துப் பிரிவினை, வியாபாரப் பெருக்கம், வெளிநாடு செல்லல், வீடு வாங்க வாய்ப்பு, குழந்தைகளுக்குச் சுப காரியம்னு எல்லாமே சந்தோஷமா சாதகமா இருக்கும். சூழலும் மனசும் சந்தோஷம்னா, குடும்ப உறவுல அது ரெண்டு மடங்காகுமில்ல. அப்பப்ப சனியைக் கும்பிட்டுக்கறது சாதகமாக இருக்கும் அவ்வளவுதான் சொல்வேன்.

**ரிஷபம்** : பழகுவதற்கு இனிய பண்பாளவர்களே! நன்மையும் தீமையும் சமமா வரும். உத்யோகத்தில் சிக்கல் தீர்ந்து பண வரவு சீராகும்; கூடவே உடம்பு கொஞ்சம் மக்கர் பண்ணும்; வர்ற பணம் அதுக்கே செலவாகும். கேட்ட கடன் கிடைக்கும். இந்த நேரம் பார்த்துதான் தடைப்பட்ட திருமணம் ஓ.கே. ஆகும். இப்படிச் சமமா தர்ற குருவை நமஸ்காரம் பண்ணிச் சாந்தப்படுத்தினா, தலைக்கு வந்தது தலைப் பாகையோடு போகும்.

**மிதுனம்** : கனவும் கற்பனையும் பிசைந்து வாழ்க்கையில மிதக்கும் மிதுன ராசிக்காரர்களே! குருட்டு யோசனை இல்லாம கவனமா வண்டி ஓட்டுங்க. சின்ன விபத்துக்கு வாய்ப்புண்டு. வாக்குவாதம் கூடவே கூடாது. கொஞ்சம் விட்டுக் கொடுத்துப் போயிடுங்க. வழக்கும் தள்ளிப் போகும். இந்த வாரம் மட்டும் கவனமா சிவனேன்னு போயிட்டு இருங்க. அதாவது சிவனை மனசுல வைச்சுக் கிட்டுப் போங்க.

**கடகம்** : அன்புக்கு நான் அடிமை, தமிழ்ப் பண்புக்கு நான் அடிமைன்னு போற கடக ராசிக்காரர்களே! கூட இருக்கற ஃபிரண்ட்ஸ்ங்க பிரச்னையில கோத்து விட்டுருவாங்க ஜாக்கிரதை. இடமாற்றம் எதுல வேணா இருக்கலாம். இரத்த பந்துக்களால் தொல்லை உண்டு. டென்ஷன் நிறைஞ்ச வாரம். கோயிலுக்குப் போய், ராகு கேதுவுக்கு ஒரு வணக்கம் வைச்சிட்டுப் போங்களேன்.

**சிம்மம்** : ராசிதான் சிங்கம், ஆனா, பார்க்க, பழக பூனை மாதிரி நீங்க. திருமணம், வேலை, வழக்கு, பணம், உறவு, இப்படி எதைக் கேட்டாலும் இந்த வாரம் தான் கிளப்பும் வாரம். போயி சாமியக் கும்பிட்டுச் சந்தோஷமா அனுபவிங்க.

**கன்னி** : வள்ளல் மனம் கொண்ட கன்னி ராசி வாசகர்களே! வீடு மாறுவீங்க.



    

**06.07.08 முதல் 12.07.08 வரை**

கூடவே வேலையும் மாறும். வராத கடனும் வரும், புதுக் கடனும் கிடைக்கும். எதுக்கு? சுபகாரியம் நடக்கப் போவுதில்ல அதுக்கு. சொத்து பாகப்பிரிவினை சுபமா முடியும். ஆனா ஒண்ணு, பிஸினஸ் கூட்டாளியோட மனஸ்தாபம் ஏற்பட்டு, பிரிஞ்சு போயிடுவீங்க. அதுதான் மனசுக் குக் கஷ்டமான ஒண்ணு. மத்தபடி எல்லாம் ஓ.கே.தான்.

**துலாம்** : நட்புக்குப் பெயர்போன துலாம் ராசி நண்பர்களே! வீடு மாற்றம், கடன் தீரும், எதிரிகள் விலகல், வியாபாரத் தில் லாபம், கணவன் மனைவி உறவு திருப்தி எல்லாம் நல்லா நடக்கும். அம்மா வின் உடல்நிலை பாதிப்படைந்து, இந்தச் சந்தோஷத்தை முழுசா அனுபவிக்க முடி யாம மாத்திவிட, கொஞ்சம் வாய்ப்புண்டு. கேதுவை வழிபட்டு வாங்க.

**விருச்சிகம்** : பேச்சுவன்மை கொண்ட விருச்சிக ராசி தோழர்களே! புண்ணியஸ் தலத்துக்காக வெளியூர் போக நிச்சயம் வாய்ப்புண்டு. திருமண ஏற்பாடு சாத்ய மாகும். வெளிநாடு போக அழைப்பு வரும். தினமும் சனிபகவானை வணங்கி வந்தால், எல்லா நாளும் நல்ல நாளாய் அமையும்.

**தனுசு** : உங்களின் நடுநிலையான பேச்சால் எவருடைய ஆதரவும் இன்றி தனித்து விடப்பட்ட தனுசு ராசிக்காரர் களே! நட்பு, உறவு, சுற்றம் எவரையும் நம்பாமல் இறைவன் திருவடியை மட்டும் சரணடையுங்கள். ஏன் இப்படிச் சுத்தி வளைச்சுச் சொல்றேன்னா... இந்தவாரம் சோதனைக்காலம். சோமநாதனை பற்றிக் கொள்ளுமய்யா... எல்லாம் அவன் ஆட்டம் தானே!

**மகரம்** : கலைத்தாகம் உள்ள மகர ராசிக்காரர்களே! மறைமுக எதிர்ப்பால் மனச்சஞ்சலம் வரும். எதிலும் நோ கமென்ட்ஸ், நோ ஆர்கியூமென்ட் ப்ளீஸ். இத ஃபாலோ பண்ணா போதும். இந்த வாரம் தானா போயிடும்.

**கும்பம்** : தலைமை தாங்கும் தகுதி படைத்த கும்ப ராசிக்காரர்களே! தடைப் பட்டு வந்த சந்ததி, கல்வி சாதகமாய் முடியும். நின்றுபோன கலை முயற்சிகள் கன ஜோராக நடக்கும். முறிந்த நட்பின் கருத்து வேறுபாடு கலைந்து, புதிய அத்யாயம் வாழ்வில் துவங்கும். கொஞ்சம் மனம் விட்டுப் பேசுங்கள். பாதிப் பிரச்னை இந்த வாரத் துவக்கத்திலேயே தீர்ந்து போகும். பெஸ்ட் ஆஃப் லக்!

**மீனம்** : மீன ராசிக்காரர்களே! கூட்டணி விலகுவதால் சத்ரு தொல்லையும் விலகும். இடமாற்றம் இருப்பதால் செலவு அதிகரிக்கும். வழக்கு வெற்றி பெறுவதால் மனச்சஞ்சலம் தீரும். புதிய முயற்சியால் வேலைப்பளு கூடும். பரவாயில்லை, சுமா ரான வாரம். ராகு / கேது / சனி இம் மூவரையும் வணங்கி வந்தால் போதும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!



# வல்லமை தாராயோ

குத்துப்பாட்டும் ரெட்டை அ(ன)ர்த்த வசனங்களும் இல்லாமல், உணர்வுகளின் உயிர்க் கலவையென ஒரு படத்தைத் தந்த தற்காக அறிமுக இயக்குநர் மதுமிதாவுக்கு, ஸ்பெஷல் பாராட்டு பொக்கே!

காதலனை விட முடியாத, அதேசமயம் கணவனையும் தொட முடியாத ஒரு சராசரி பெண்ணின் உணர்வு ஊர்வலம்தான் கதை. காதலனாக ஸ்ரீகாந்த்; கணவனாக பார்த்திபன்; இருவருக்கும் மத்தியில் உணர்வுகளின் ஊசலாட்டமாய் சாயாசிங்.

கும்மாளமும் குத்துப்பாட்டுமாக அறியப்பட்ட சாயாசிங், பண்பட்ட நடிப்பின் மூலம் தன்னால் நடிக்க முடியும் என்பதை நிரூபித்திருக்கிறார். அவர் மனப்போராட்ட காட்சிகளில், காதலின் வலி தெரிகிறது. மனைவியைக் காயப்படுத்தத் தெரியாத நல்ல கணவனாக பார்த்திபன். மனைவியின் விருப்பப்படி, தன்னைத் தீயவனாகக் காட்டி டைவர்ஸ் கொடுக்கையில், எல்லோரது பரிதாபத்தையும் ஒட்டு மொத்தமாகக் குத்தகை எடுக்கிறார். மற்றபடி, அதே குறும்பும் குறுஞ்சிரிப்பும் கொண்ட பார்த்திபன். படத்தின் பாதி வரை காதலன் ஸ்ரீகாந்த்தை அறிமுகப்படுத்தாது, ஒரு டீ.வி. பேட்டி மூலம் அவரை அறிமுகப்படுத்துவதும், அதன் மூலம் அவருக்குத் திருமணமாகப் போகும் செய்தியை சாயாசிங் அறிவதும், இயக்குநரின் புத்திசாலித்தனமான டச். கருணாஸின் மெக்கானிக் செட் காமெடி கலகலப்பூட்டுகிறது.

தனிமையில் வசிக்கும் சாயாசிங்குக்குத் துணையாக வரும் தேவிப்ரியா கேரக்டரின் யூகிக்க முடியாத திருப்பம், நீதிமன்றத்தில் வாதங்களுக்கு ஏற்ப விரியும் காட்சிகளின் திரைக்கதை யுத்தி ஆகியவற்றில் இயக்குநரின் இருப்பு தெரிகிறது. படத்துக்கு இசையும், ஒளிப்பதிவும் செம பூஸ்ட். இசையமைப்பாளர் பரத்வாஜ், ஒளிப்பதிவாளர் ராஜேந்திரன் ஆகியோரின் உழைப்பு வல்லமை சேர்க்கின்றன.

கதையில் இருக்கும் வல்லமை, திரைக்கதை வேகத்திலும் காட்சி அமைப்பிலும் காட்டி இருக்கலாம். கத்திமேல் நடப்பது போன்ற ஒரு கதையை எடுத்துக்கொண்டு, ரோஜா இதழ்களால் வருடும் உணர்வைக் கொடுத்திருக்கும் இயக்குநர் கவனத்துக்குரியவர். வல்லமை தாராயோ - வலிமையான உணர்வுக் கவிதை!

– அசாருதீன்

# அருள்வாக்கு

# முக்தி!

பல காரணங்களுக்காகப் பக்தி புரிந்தாலும், முக்தியை வேண்டி பக்தி செய்வதே இவற்றில் சிரேஷ்டமாகும். 'ஞானத்தினால்தான் நேரடியாக முக்தி கிடைக்கும்; ஈசுவர உபாசனையாகிய பக்தியால் அல்ல' என்பதே ஸ்ரீ சங்கரர் முதலிய அத்வைத ஆசாரியர்களின் கருத்து. முக்தி என்றால் என்ன? 'விடுபடுவது' என்று அர்த்தம். விடுபடுவதைத்தான் தமிழிலும் 'வீடு' என்று சுருக்கிச் சொல்கிறார்கள். எதிலிருந்து விடுபடுவது? சம்சாரத்திலிருந்து விடுபடுவதுதான் முக்தி. மறுபடி மறுபடி பிறந்து கொண்டும் செத்துக்கொண்டும் இல்லாமல், நித்தியமான சத்திய நிலையை அடைவதுதான் முக்தி. மனசு என்று ஒன்று இருப்பதால்தான், சம்ஸார பந்தம் தெரிகிறது. மனசு மறைந்தால்தான் பந்தத்திலிருந்து விடுதலை. ரூபம், குணம் இவை இருக்கிற வரையில், இவற்றை அனுபவிக்கிற மனசும் இருக்கத்தான் செய்யும். பக்தி செலுத்துகிறபோது ஈசுவரனுடைய ரூபம், குணம் எல்லாவற்றையும் மனசினால் அனுபவிக்கிறோம். பக்தி நிலையிலும் பலவிதமான உணர்ச்சிகள், பரவசம், ஆனந்தம், அழுகை எல்லாம் இருக்கத்தான் செய்கின்றன. மனசு அதற்கு ஆதாரமான வஸ்துவில் கரைந்துபோய், அந்த ஆதார வஸ்து மட்டும் நிற்கும் போதுதான் எந்த மாறுதலும் இல்லாத சாந்த நிலை - முக்தி அல்லது மோட்ச நிலை சித்திக்கிறது. இந்த மனசுக்கு ஆதாரமாக இருக்கிற ஆத்மா என்பது என்ன என்று, அனவரதமும் விசாரம் செய்துகொண்டே இருப்பதுதான் ஞான மார்க்கம் என்பது. இதே விசாரத்தில் மனசை முழுக்கினால், கடைசியில் ஈசுவரானுக்கிரகத்தினால் மனசு மறைந்து, ஆத்மா இன்னதென்று தெரிந்து விடுகிறது. ஆத்ம சாட்சாத்காரம் என்கிற அந்த நிலையே விடுதலை அல்லது முக்தி என்று தெரிகிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



அமரர் கல்கி

# கவர்னர் விஜயம்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

கடைசியில், குறிப்பிட்ட தினம் வந்தது. சிவகுருநாதஞ் செட்டியார் அதிகாலையிலேயே எழுந்திருந்து, ஸ்நானபானாதிகளை முடித்துக்கொண்டார். பின்னர், நிலைக்கண்ணாடியின் முன்பு நின்று அரை மணி நேரம் உடை தரித்துக்கொண்டார். அவருடைய அருமை மனையாள், அருகிலிருந்து துணிகளைத் தட்டிக் கொடுத்தும், நகைகளைத் துடைத்துக்கொடுத்தும் உதவி புரிந்தாள். அலங்காரம் செய்துகொண்டு முடிந்ததும், காரியஸ்தரைவிட்டு மோட்டாரைக் கொட்டகையிலிருந்து கொண்டு வரச் சொன்னார். செட்டியாரின் மனைவி வாசலில் போய்ச் சகுனம் பார்த்தாள். நல்ல சகுனமான தருணத்தில், நல்ல நேரத்தில் செட்டியார் வீட்டிலிருந்து வெளியே புறப்பட்டு மோட்டாரில் அமர்ந்தார். மோட்டார் வண்டியின் முனையில் பெரியதொரு யூனியன் ஜாக் கொடி அழகாக ஆடிக்கொண்டிருந்தது. அடுத்த ஐயங்கார் வீட்டைப் பார்த்ததும், செட்டியாருக்குக் கொஞ்சம் 'சொரேல்' என்றது. தம்மைப் போலவே ஐயங்காரும், முதல் நாள் மாலைவரை பேசாமலிருந்துவிட்டு, இரவுக்கிரவே வீட்டு வாசலைத் தோரணங்க்ளாலும் கொடிகளாலும் அலங்கரித்திருப்பதைக் கண்டார். இதற்குள் மோட்டார் வண்டி புறப்பட்டுவிட்டபடியால், அதிகமாகச் சிந்திப்பதற்கு நேரம் இல்லை. ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் வண்டி ரயில்வே ஸ்டேஷனை அடைந்தது. தமக்கு முன்னால் ஐயங்கார் அங்கு வந்து தயாராகக் காத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தார். உள்ளுக்குள் அவர்களிடையே இவ்வளவு போட்டி நடந்துகொண்டு வந்ததாயினும், வெளிக்கு அவர்கள் அத்தியந்த நண்பர்கள். எனவே செட்டியார் ''என்ன ஐயங்கார்வாள்! ஏது இவ்வளவு அதிகாலையில் விஜயம் செய்தது?'' என்று கேட்டார். ''இங்கு ஒரு சிறு காரியமாக வந்தேன். தாங்கள் சென்னைப் பட்டணம் போவதாகக் கேள்விப்பட்டேன். அதற்காகத்தான் ஸ்டேஷனுக்கு வந்தீர்களோ?'' என்று கேலி செய்யும் பாவனையாக ஐயங்கார் வினவினார். ''அதிருக்கட்டும், தாங்கள் வீட்டு வாசலை இரவுக்கிரவே அலங்காரம் செய்திருப்பதாகக் காண்கிறதே! என்ன விசேஷம்?'' என்றார் செட்டியார். ''தங்கள் வீட்டு வாசலிலும் இன்று காலையில் தோரணங்களைப் பார்த்தேன். தங்களுக்கு இன்று சஷ்டியப்த பூர்த்தி விவாகம் என்று சொன்னார்கள். அப்படித்தானோ?'' என்று 'கிருதக்'காய்க் கேட்டார் ஐயங்கார். செட்டியார் இதற்குக் கடுமையாக பதில் சொல்ல எண்ணினார். ஆனால், அதற்குள் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் கூட்டம் வந்து நின்றுவிட்டது. நகரசபை அங்கத்தினர்களும், தாலுகா, ஜில்லா போர்டு அங்கத்தினர்களும், பட்டதாரிகளும், இனி பட்டம் பெற இருந்தவர்களும், சில வக்கீல்மார்களும், உத்தியோகஸ்தர்களும், பந்தோபஸ்துக்காக வந்த போலீஸ்காரர்களும், பகிஷ்காரப் பிரசாரம் செய்ய வந்து, ஏதோ இந்தத் தமாஷையும்



கொஞ்சம் பார்க்கலாமே என்று உள் நுழைந்த தொண்டர்களும், அவர்களைத் தொடர்ந்து வந்த இரகசியப் போலீசாரும் புகைவண்டி நிலைய மேடையில் எள்ளுப்போட்டால் கீழே விழாதவண்ணம் நெருங்கிக் கூடினார்கள். எல்லாரும் கண் பூத்துப் போகும்படி ரயில் பாதையை நோக்கிய வண்ணமாய் நின்றார்கள்.

கடைசியாக, கவர்னர் துரையின் ஸ்பெஷல் வண்டி வந்து சேர்ந்தது. போலீஸ் அதிகாரிகள் அங்கும் இங்கும் அலைந்து அமைதியை நிலைநாட்டினார்கள். கவர்னர் பிரபு வண்டியை விட்டுக் கீழிறங்கினார். அவர் போவதற்கு வழி ஏற்படுத்தப்பட்டது. என்னென்னவோ மனோராஜ்யம் செய்து கொண்டு அங்கு வந்திருந்தவர் அனைவரும், அந்த வினாடியில் கெட்டியாக மூச்சுக்கூட விடாமல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ள மிக்க ஆவலுடன் அவரை நோக்கி நின்றனர். எங்கே துரை முகமெடுத்துக்கூடப் பாராமல் போய்விடுவாரோ என்று எண்ணி, அவர்கள் நடுநடுங்கினார்கள். அப்போது அங்கிருந்தவர்களில் ஒருவர் உணர்ச்சி மேலீட்டினால் மூர்ச்சையாகி



''உங்களுக்கு தோசை வைக்கும்போது மட்டும் அந்த சர்வர் சிரிச்சுக்கிட்டே வச்சாரே, ஏன்..?''

''பொன்முறுவலா கொண்டுவாப்பான்னு சொன்னதைத் தப்பாப் புரிஞ்சுக்கிட்டாரோ என்னவோ...!''

**- சீர்காழி வி.ரேவதி**

விட்டாரென்றும், ஆயினும் மூர்ச்சை நிலையிலும் அவருடைய தீவிர இராஜ பக்தியின் காரணமாக, கீழே விழுந்து குழப்பம் விளைவியாமல் தூணைப் பிடித்துக்கொண்டு மறைவில் நின்று கொண்டிருந்தாரென்றும், பின்னால் தெரிய வந்தன.

நிற்க, துரை கீழிறங்கியதும், தொப்பியை மரியாதைக் குறியாகக் கையில் எடுத்துக்கொண்டு, ஒரு மூலையிலிருந்து வரிசையாக எல்லாரையும் ஒரு பார்வை பார்த்துக்கொண்டு வந்தார். அங்கிருந்தோர் அனைவரும், தங்கள் வாழ்வின் இலட்சியம் நிறைவேறிவிட்டதென்னும் எண்ணம் கொண்டனர். அவருடைய பார்வை தம்மீது விழக்கூடிய கணத்திலும் குறைந்த நேரத்தில் தாம் சலாம் செய்யத் தவறி விட்டால் என்ன செய்வதென்று எல்லாருக்கும் பயம். எனவே, முதலில் அவர் பார்க்க ஆரம்பித்ததிலிருந்து, அவர் கண்கள் கடைசிவரை சென்று முடித்துப் பிறகு அவர் நடக்கத் தொடங்கியவரையில், அங்கிருந்தோர் அனைவரும் சலாம் செய்து கொண்டேயிருந்தனர்.

மேலக் காற்று வீசி அடிக்கும்போது, மரங்கள் நிறைந்த தோப்பில் எவ்வாறு கிளைகள் இடையீடின்றி ஆடி அசைந்து கொண்டிருக்குமோ அவ்வாறு, ஐந்து நிமிஷ நேரத்துக்கு அங்கிருந்தோர் அனைவருடைய கரங்களும் நெற்றிக்குச் சென்று கீழே வந்த வண்ணமாயிருந்தன.

இவ்விதம் ஒருமுறை இராஜபார்வை பார்த்துவிட்டு, கவர்னர் துரை வேகமாக நடந்து போய், வெளியில் தயாராய் நின்ற மோட்டாரில் ஏறிச் சென்றார். அவரைத் தரிசிக்க வந்து கூடியிருந்தோர் எல்லாரும் தங்கள் தங்கள் இல்லங்களுக்கு ஏகினர். ஸ்ரீமான் சிவகுருநாதஞ் செட்டியாரும் சௌக்கியமாக வீடு போய்ச் சேர்ந்தார். உடனே அவருடைய மனைவி, குழந்தைகள், காரியஸ்தர், வேலைக்காரர்கள் எல்லாரும் சூழ்ந்துகொண்டு, ''என்ன நடந்தது?'' என்று ஆவலுடன் கேட்டார்கள். செட்டியார் சற்று இளகிய மனங்கொண்டவர். இவ்வளவு பேருடைய உள்ளங்களையும் அவர் வீணில் புண்படுத்த விரும்பவில்லை. எனவே அவர், ''இன்றைய விசேஷம் இவ்வளவு நன்றாக நடந்தேறியதற்காக, குருக்களைக் கூப்பிட்டு அம்பிகைக்கு அர்ச்சனை செய்ய ஏற்பாடு பண்ண வேண்டும்'' என்றார். செட்டியாரின் மனைவி முதலியோர், இன்னும் மிகுந்த ஆவலுடன், ''கவர்னர் தங்களுடன் பேசினாரா? தாங்கள் என்ன பதில் சொன்னீர்கள்? என்ன விசேஷம் நடந்தது?''

என்று ஒரே மூச்சாகக் கேட்டனர். செட்டியார் சொன்னதாவது : ''கவர்னர், வண்டியை விட்டுக் கீழே இறங்கியதும், ஜில்லா கலெக்டர் முதலிய ஒருவர் இருவருடன் சற்றுப் பேசிவிட்டு, நேரே என்னிடம் வந்தார். நான் கொஞ்சமாவது பயப்பட்டேன் என்கிறீர்களோ? இல்லவே இல்லை. என்னருகில் வந்ததும், துரை என் கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டு, 'செட்டியார்வாள்! தங்களைப் பற்றி நிரம்பவும் கேள்விப்பட்டிருக்கிறேன். தாங்களும் தங்கள் பந்துமித்திரர்களும் சுகந்தானே?' என்று கேட்டார். உங்களுக்குத்தான் தெரியுமே? நான் பேச ஆரம்பித்தால் இலேசில் விடுகிற பேர்வழியா? 'துரையவர்களே! தங்கள் ஆட்சியிலே எவ்விதக் குறைவுமின்றி வாழ்ந்து வருகிறோம். ஆனால், ஒரு விஷயத்தில்தான் தங்கள் அரசாங்கத்தின் மீது குறை சொல்ல வேண்டியதாயிருக்கிறது. பட்டங்களை வழங்கும் விஷயத்தில் மட்டும், தாங்கள் தராதரங்களைக் கவனித்து வழங்குவதில்லை' என்று நான்...''

''ஐயையோ! இவ்வளவு கடுமையாய்ப் பேசிவிட்டீர்களே? துரை கோபித்துக் கொள்ளவில்லையா?'' என்று காரியஸ்தர் பரிந்து வினவினார்.

''ஹூம், கோபித்துக்கொள்ளவா? உனக்கு என்ன தெரியும்? நான் இவ்வாறு சொன்னவுடன், கவர்னர் துரை என் கையை மீண்டும் பிடித்துக் கொண்டு, 'செட்டியார்வாள், இந்த விஷயத்தை எனது கவனத்துக்குக் கொண்டு வந்ததற்காக நிரம்ப வந்தனம். உடனே கவனித்துத் தக்கது செய்கிறேன்' என்று சொன்னார். அப்போது அங்கிருந்தவர்கள் எல்லோரும் கரகோஷம் செய்தார்கள். ஆனால், நமது ராவ்பகதூர் ஐயங்காரைப் பார்க்க வேண்டுமே? அவர் முகத்தில் ஈயாடவில்லை. அவரை ஒருவரும் கவனிக்கவில்லை. ஒரு மூலையில் பேசாமல் நின்றுகொண்டிருந்தார்'' என்று செட்டியார் சரமாரியாகப் பொழிந்தார்.

அதே சமயத்தில், ராவ்பகதூர் கூர்மாவதாரம் ஐயங்கார் வீட்டு அந்தப்புரத்துக்கு யாராவது சென்று ஒட்டுக் கேட்டிருந்தால், ஸ்ரீமான் ஐயங்கார் தமது அருமைக் காதலியிடம், ''ஆனால், சிவகுருநாதஞ் செட்டியாரை கவர்னர் முகமெடுத்துக் கூடப் பார்க்கவில்லை. பாவம்! சிவனே என்று இவர் மூலையில் நின்று கொண்டிருந்துவிட்டுப் போய்ச் சேர்ந்தார்'' என்று கூறி முடித்தது, காதில் விழுந்திருக்கும். ●



''ஏதோ வியாதி இருக்கற மாதிரி இருபத்திநாலு மணி நேரமும், எனக்கு ஒரே டென்ஷன் டாக்டர்!''

''உங்களுக்குப் பொழுது போக்கு... ஏதாவது?''

''மாத்திரை சாப்பிடறதுதான்!''

– வெ.சீதாராமன்

# பாறையை உடைக்கும் வளையல்கள்!

''இதுக்கு முன்னாடி நாங்க ஒவ்வொருத்தரும், கல் உடைக்கும் தொழிலாளிங்க! மாங்கு... மாங்குன்னு... கல் உடைச்சாலும், ஒரு நாளைக்கு முப்பது - நாப்பது ரூபாய்க்கும் மேல கூலி தேறாது. இப்ப அப்படி இல்லே! ஒரு கல் குவாரிய, நாங்களே சொந்தமா ஏலம் எடுத்திருக்கோம். இதுக்குத் தொழிலாளிகளும் நாங்களே, முதலாளிகளும் நாங்களே!'' எனக் கூறுகின்றனர் ஈரோடு மாவட்டம், அந்தியூர் - அத்தாணி அருகே கரட்டூர் கிராம அன்னை தெரசா மகளிர் சுய உதவிக் குழுவினர்.

''இதே பகுதியில் மோளப்பாறை கல் குவாரி ஏலம் விடப் போவதாகத் தகவல் தெரிந்தது. அந்தக் கல் குவாரி ஏலம் எங்கள் மகளிர் சுய உதவிக் குழுவுக்கு வேண்டுமென, மாவட்ட கலெக்டரிடம் மனு அளித்தோம்.



✱ சின்னப் பிள்ளை

கல் குவாரி ஏலதாரர்கள் பலரும் ஏலம் எடுக்காமல், தவிர்த்து வந்த குவாரி அது. காரணம், சற்று கடினமான கல் பாறைகள் கொண்டது அந்தக் குவாரி. 'நீங்க பொம்பளைங்களா சேர்ந்து ஏலம் எடுத்து, அதைப் போயி உடைக்கப் போறீங்களாக்கும்?' எனப் பலரும் எங்களைப் பார்த்து ஏளனம் செய்தனர். அவர்களின் ஏளனப் பேச்சுகளைத் தகர்த்தெறிந்து, எங்களாலும் முடியுமென நிரூபித்துக் காட்டியுள்ளோம் மோளப்பாறை கல் குவாரியில்!'' என்கிறார் குழு உறுப்பினர்களில் ஒருவரான ஜெயமணி. இவர் பத்தாம் வகுப்புவரை படித்துள்ளதால், குழுவின் எழுத்துப் பணிகளைக் கவனித்துக்கொண்டு, கல் உடைத்தும் வருகிறார்.

**மோ**ளப்பாறை கல்குவாரி 2004 மார்ச்சில் ஏலம் எடுக்கப்பட்டது. ஏலத்





* சித்ரா தேவி

தொகை ஐந்து வருடங்களுக்கு ஒரு லட்ச ரூபாய். ஏலம் எடுத்த முதல் வருடத்திலேயே நான்கு தவணைகளில் அந்தப் பணத்தைச் செலுத்திவிட்டது இந்த சுய உதவிக்குழு. கல் குவாரியிலிருந்து வெளியே கற்களை ஏற்றி விடும்போது நிர்ணயிக்கும் பர்மிட் கட்டணம், தனியாக கனிம வளத் துறைக்குப் போய்ச் சேர்கிறது.

''நாங்க பன்னெண்டு பேருமே இதுல வேலை செய்யறோம். கம்ப்ரஸர் மிஷின் மூலமா துளை போட்டு, அதுல வெடி வெச்சு பாறைகளைத் தகர்க்கணும். அதுக்குன்னு இருக்கிற லைசென்சு ஆளுங்ககிட்ட பணம் கட்டிட்டா, அவங்க செய்வாங்க. மத்த எல்லா வேலைகளையும் பொம்பள ஆளுங்கதான் செய்யறோம். ரப்பு கல்லு, சக்கை, ஒன்னரை ஜல்லின்னு மூணு விதமா கல் உடைக்கறோம். எல்லாம் சுத்தியலாலேயே உடைச்சுப் போட்டுடுவோம். பன்னெண்டு பேருக்கும் தினசரி அம்பது ரூபா சம்பளமா எடுத்துக்கறோம். வித்து வர்றதுல லாபப் பணத்தை பேங்க்ல சேமிக்கறோம்!'' என்கிறார் சின்னப்பிள்ளை.

''இந்தக் கல் குவாரியில மகளிர் சுய உதவிக் குழு முழு மூச்சா செயல் படறதுக்கு மாவட்ட நிர்வாகமும், மாவட்ட திட்ட அதிகாரி குமார் சாரும்தான் காரணம். இன்னொண்ணும் சொல்றோம். நாங்க ஒண்ணும் கல்லு உடைக்கற பொம்பளைங்க மட்டும் இல்லீங்க. 2008 தைப் பொங்கல் விழாவுல மகளிர் சுய உதவிக் குழுக்களின் வட்டார அளவுல, பட்டிமன்றப் போட்டி, நாடகப் போட்டி, பாட்டுப் போட்டியென எல்லாத்துலயும் முதல் பரிசு. இந்தத் திறமைங்களை வெளிக் கொண்டாந்தவரு, ஈரோடு மாவட்ட செய்தி மக்கள் தொடர்பு அலுவலர் பாலையா'' என்று சாதனையையும் நன்றியையும் கலந்து முன் வைக்கிறது இந்தக் குழு.

''குழுவோட வங்கிச் சேமிப்பு இரண்டு லட்ச ரூபாய். இப்ப இந்தக் கல் குவாரி குத்தகை இன்னும் ஒரு வருஷம் இருக்கு. அது முடியும்போது, வேறு ஒரு கல் குவாரி குத்தகையை மாவட்ட நிர்வாகம் எங்களுக்குத் தந்து உதவ வேணும்ங்க. இல்லாட்டி, நாங்க வேற கல் குவாரி முதலாளி கிட்டே கூலிக்குத்தாங்க போய் வர வேணும்'' என கோரிக்கை வைக்கிறார், சுய உதவிக்குழு ஊக்குநர் சித்ரா தேவி.

கட்டுரை, படங்கள்:

**ஸ்ரீரங்கம் திருநாவு**



* ஜெயஸ்ரீ



# சிரிக்கெட் மேட்ச்!

இந்த ஸ்டேடிய வாஸ்து சாஸ்திரப்படி இப்படி நின்னா, போட்டியில ஜெயிச்சுடலாம்னு யாரோ சொன்னாங்களாம்...



'இரு நாட்டு அணிகளும் மோதுகின்றன'ன்னு டீ.வி.யில சொன்னாங்க. இப்படி மோதிக்குவாங்கன்னு நெனைக்கல...

விழுந்த ஸ்டம்ப்களைத் திரும்ப அழுத்தி வைக்கறேன்னு இப்படியா செய்யறது..!"

கருத்து, படம் : ராம்

எதிரணியில ஒரு பெரிய பேட்ஸ்மேன் இருக்கார்ன்னு சொன்னாங்க. இப்படி இருப்பார்னு நெனைக்கலைங்க.



''போஸ்டல் டிபார்ட்மென்ட்டின் சரிவுக்குக் காரணம் கண்டுபிடிச்சிருக்கியாமே, நீ?''

''யெஸ்! முன்கோடுன்னு வைக்காம அமங்கலமா பின்கோடுன்னு வைச்சுத் தொலைச்சிருக்காங்களே!''

– பி.ஜி.பி. இசக்கி





''52, 24, 26, 12, 70. எல்லாத்தையும் கூட்டினா என்ன வரும்? நீ சொல்லு.''

''டோட்டல் வரும் டீச்சர்!''

– மா.கண்ணன்

''பொதுவாக டாக்டர்களுக்கு முன்கோபம் இருக்குமாமே?''

''எந்த முட்டாள் சொன்னான்னு நீங்க இந்த அறிவுகெட்ட கேள்வியை என்கிட்டே கேட்டீங்க?''

– வெ.சீதாராமன்





''என்ன டிரைவர்? வேலைக்குச் சேர்ந்து அஞ்சு வருஷமானப்புறம் ஸ்வீட் தர்றியே... என்ன விசேஷம்?''

''டிரைவிங் லைசன்ஸ் எடுத்திட்டேன் முதலாளி!''

– வந்தை ஜி.கே.நிதி

# அய்... தோ பார்ரா..!

'அவனின்றி ஓர் அணுவும் அசையாது' என்பார்கள் நமது முன்னோர்கள். அந்த 'அவன்' எதுவாக இருக்கும்? எங்களுக்குத் தெரிந்தது காற்றுதான். 'முனி' என்றால் காற்று என்ற பொருளுண்டு. நம்மை விட்டு விலகாது, நம்முடனே இருந்து நம்மைக் காப்பாற்றுவது காற்று. காற்று மாதிரி கடைசி வரைக்கும் கூட இருந்து காப்பாற்றுகிறவன் எங்கள் முனீஸ்வரன்.



# முனீஸ்வரன்

ஜோலார்பேட்டை திருப்பத்தூர் நெடுஞ்சாலையில், ஜோலார்பேட்டை ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஆறாவது கிலோமீட்டரில் அமைந்துள்ளது, எங்க இஷ்ட தெய்வம் முனீஸ்வரன் கோயில்.

டிராஃபிக் போலீஸ் நிக்கச் சொல்லி கை காட்டினாலும் நிறுத்தாத வாகன ஓட்டிகள், இந்த முனீஸ்வரன் கோயில் வாசலில் நிறுத்தி, முனியை வழிபட்ட பிறகே ஓட்டிச் செல்வர். இவரை வணங்கிவிட்டுப் போனால், விபத்து நடக்காது என்பது நம்பிக்கை. இந்த முனி சாலையோரத்தில் இருப்பதால் சாலைநகர் முனீஸ்வரன் என்ற பெயர் பெற்றது.

ஒரு நூற்றாண்டுக்கு முன், வணிக நகரமான திருப்பத்தூரிலிருந்து தானியங்கள், வெல்லம் ஆகியவற்றை, வேலூர் மண்டிகளுக்கு மாட்டு வண்டிகளில் சாரை சாரையாய் ஏற்றிச் செல்வது வழக்கம். அப்போது வழிப்பறியும் அதிகம் இருந்தது. வணிகர்களும் பொதுமக்களும் பெருந்துயரைச் சந்தித்தனர். என்ன செய்வது எனத் தெரியாமல் அவர்கள் விழித்தபோது, இப்பகுதியைச் சார்ந்த முனியன் என்ற வீரன், அந்தக் கொள்ளையர்களை அழிக்கச் சபதம் மேற்கொண்டு, கிராமத்தார்களின் ஆசியோடு வழிப்பறித் திருடர்களுடன் தனியாளாய் யுத்தம்

செய்து, அவர்களை அழித்தான். அந்தச் சண்டையில் பலத்த காயத்தோடு முனியன் வீர மரணம் அடைந்தான். அந்த முனியன் என்ற வீரனின் நினைவாகவே, அன்றுமுதல் இவ்வழிபாடு துவங்கியது. வாகன ஓட்டிகளும் வணிகர்களும் அதை நினைவு கூறும் விதமாக நன்றி கூறி, காணிக்கை செலுத்திய பின்னரே இச்சாலையைக் கடக்கின்றனர்.

1970-ல் ஜோலார்பேட்டை சந்திப்பில் பெங்களூர் செல்லும் வண்டிகளுக்காக, அகலப்பாதை அமைக்கும் பணி தொடங்கியபோது, வாகன ஓட்டிகளால் இக்கோயில் அமைக்கப்பட்டது.

சுற்றியுள்ள தாமலேரிமுத்தூர், பால்நாங்குப்பம், பாச்சல் கிராம மக்களின் குலதெய்வமும் இதுதான்.

மே மாதம் இரண்டாவது வாரம் ஞாயிற்றுக்கிழமை, வெளியூரில் இருந்தாலும், குடும்பத்தோடு இங்கு கிளம்பி வந்து பொங்கலிட்டு வழிபாட்டை முடித்தபின்தான், மீண்டும் வேலைக்குச் செல்வார்கள். அருகிலிருக்கும் தனியார் சுயநிதிக் கல்லூரி மாணவர்கள், தேர்வுக்கு முன் கூட்டம் கூட்டமாய் வந்து முனியை வழிபட்ட பின்னரே தேர்வு எழுதச் செல்வது, சுவாரஸியத் தகவல்.

கருத்தும் படமும்:
**தி.கு.பொன்னம்பலம்**

## கஷ்டப்படுத்தாத இஷ்ட தெய்வம்

3

**அந்தச் சண்டையில் பலத்த காயத்தோடு முனியன் வீர மரணம் அடைந்தான்**



# சில கணங்கள்

''திவ்யா, உன்னை உடனே பார்க்கணும் போல இருக்கு. இப்பவே கிளம்பி வர்றியா..?''

குழந்தையாய் அடம்பிடிக்கும் மாயாவிடம், நாலு மணிக்கு முக்கியமான மீட்டிங் இருக்கிறது என்று சொல்லி, சங்கடப்படுத்த விரும்பவில்லை. ''சரிடீ... வர்றேன். என்ன ஏதாவது பிரச்னையா? வலி வந்திருச்சா... டெலிவரிக்குக்கூட இன்னும் நாளிருக்கே?'' என்றாள் திவ்யா.

''அதெல்லாம் இல்ல திவி. என்னவோ படபடப்பா இருக்கு. காரணம் சரியா சொல்லத் தெரியலை. ரொம்ப தனிமையா உணர்றேன். அதைவிட உன்னைப் பாக்கணும் போலவும் இருக்கு. முன்ன மாதிரி இருந்தா, கிளம்பியே வந்திருப்பேன்.''

''ஆல்ரைட், நீ உடம்பை அலட்டிக்காதே. இன்னும் ஒன் அவர்ல நான் அங்கே இருப்பேன். ராஜு இருக்கானா ஊர்ல?''

''அவன் நேத்திக்கே வந்துட்டான். அவனைப் பத்திப் பேசாதே. எனக்கு ப்ரஷர் ஏறிடும்.''

இரண்டு பேருக்கும் டீயை எடுத்துக் கொண்டு பால்கனிக்கு வந்தாள் மாயா. மாயாவின் வீட்டு பால்கனி திவ்யாவுக்கு மிகவும் பிடிக்கும். சிலுசிலுவென்ற மாலை நேரத்துக் காற்று மனதுக்கு இதமாக இருந்தது. மாயா தந்த இஞ்சி டீயை ருசித்தபடி, ''என்னாச்சு மாயா? குரல்ல சுரத்தே இல்லை. நேர்லயும், எதையோ பறிகொடுத்த மாதிரி இருக்கறே..?''

''தெரியலை திவி. மதியத்திலிருந்து ஒரு மாதிரியா இருக்கு. சாப்பிட பிடிக்கலை. சரி படம் எதாவது பாக்கலாம்னா, டி.வி.ல மனம் ஒட்டலை. ராஜுக்கு ஃபோன் பண்ணேன். மீட்டிங்ல இருக்கானாம். அவனைக் குறை சொல்ல முடியாது. அவனோட வேலை சுமைகள்ல மூழ்கிக் காணாமப் போய்ட்டிருக்கான். அவனுக்கு ஏத்த மாதிரி என்னை நான் ட்யூன் பண்ணிக்கக் கத்துக்கிட்டேன். சரி, உன்கிட்ட பேசினா கொஞ்சம் சரியாகிடுவேன்னு தோணித்து. அதான் உன்னை வரச் சொன்னேன். கோபமாடி?''

''சீ... உன் மேல் நான் கோபப்படுவேனா? ராஜு படுத்தறான் கண்டுக்கமாட்டேங்கறான், புள்ளத்தாச்சிப் பொண்ணுன்னுகூடப் பாக்காம லேட்டா வர்றான். அப்படி இப்படி நீ அவனைப் பத்தி கம்ப்ளெயின் பண்ணற. அவன் என்னடான்னா 'என் பொண்ணாட்டி சரியா சாப்பிட மாட்டேங்கறா, தூங்கமாட்டேங்கறா. நீயாவது சொல்லக்கூடாது'ன்னு மெஸேஜ் அனுப்பறான். யார் சொல்றதை நான் கேட்கறது?''

''உனக்கு அவனை இருவது வருஷமா ஸ்கூல் டேஸ்லருந்து தெரியும்ல. நான் பின்னாடி காலேஜ் நாள்கள்ல வந்தவ தானே. நீ ஏன்தான் எங்களுக்குள்ள காதலை மூட்டி கல்யாணம் பண்ணி வச்சியோ தெரியலைடி. பாரு அவனும் நானும் அடிச்சுக்காத நாளே கிடையாது.''

''சரி சரி எல்லாம் சரியாகிடும். அவன் நல்லவன்டி. ஒரு கெட்ட பழக்கம் கிடை யாது.''

''அதான் என் ப்ராப்ளம். ரொம்ப நல்லவனோட குப்பை கொட்ட முடியாது தெரியுமா? இதை ஏன் இங்க வைச்ச, அது ஏன் இப்படி இருக்கு? என் அம்மா மாதிரி உனக்குச் சமைக்கத் தெரியலை...''

''இதெல்லாம் வழக்கமா அவன் சொல்றது மட்டும் இல்லை, எல்லா ஆம்பளைங்

களும் இப்படித்தான். ராஜுதான் உனக்கு பெஸ்ட் சாய்ஸ். ஒழுங்கு மரியாதையா இருந்துக்க. எதுக்கெடுத்தாலும் குறை கண்டுபிடிக்காதே'' அவள் முகம் வாடுவதைப் பார்த்துப் பேச்சை மாற்றினாள். ''போன வாரம் ராதிகாவோட எங்க போன? ஷ்யாம், உன்னை தி.நகர்ல பாத்தேன்னு சொன்னார்.''

''ஆங்... ராதிகாவுக்கு ராசிக்கல் பைத்தியம் பிடிச்சிருக்கு. ராசிப்படி ரூபி போடணுமாம். அதான் ஜாய் ஆலுக்காஸ் போனோம். நானும் டாக்டர் செக்கப்புக்குப் போக வேண்டிய நாள், அதான் க்ளப் பண்ணி போனோம். அம்மாடி கடையாடி அது. திரும்பின பக்கமெல்லாம் ஒரே ஜொலிப்பு. உன்னைக் கூட்டிப் போகணும்னு ஆசைப்பட்டேன். எப்ப போலாம்?''

''அதே தி.நகர்லதான் புத்தக உலகம்னு ஒரு கடை இருக்கு. கூட்டிட்டுப் போறேன். நீ வர்றியா?''

''ஐயோ சாமி, நீ ஆலுக்காஸும் வர



உனக்குள் இன்னொரு ஜீவன் இருக்கு. நீ இப்படி அழுது உன்னை வருத்திக்கிட்டேனா, அதுவும் பாதிக்கும்.

வேண்டாம்; நான் புத்தக உலகத்துக்கும் வரலை. நான் ஜானுவோட போய்க்கறேன். எப்பப் பாத்தாலும் புக்ஸ் புக்ஸ்.. நீ எப்பத்தான் மாறுவியோ''

''ஏய்... அடங்கு. உனக்காக ஒண்ணு வாங்கிட்டு வந்துருக்கேன். மறக்கறதுக் குள்ள கொடுத்துடறேன்.'' ஒரு குட்டி டெட்டி பேரை அவள் பேக்கிலிருந்து எடுத் துத் தந்தாள். அதைப் பார்த்ததும் மாயா வுக்கு பிடித்துவிட்டது. ''ச்சோ ஸ்வீட். ரொம்ப அழகா இருக்குடி. தாங்ஸ்..''

''எதுக்கு இப்ப தாங்ஸ்... சரிடி லேட்டாகுது, நான் கிளம்பறேன்.''

''போறியா... சரி'' என்றபோது அவள் செல்ஃபோன் அடித்தது.

''ராஜா சொல்லுடா, என்னடா, ஏன் ஒரு மாதிரியா பேசறே? அப்பாக்கு என் னடா ஆச்சு. ஒழுங்கா பேசுடா. கேக்கலை. ஹலோ'' பேசப் பேச அவள் முகம் மாறிக்கொண்டே வந்தது. அவள் குரல் அழுகையில் முடிந்தது.

''என்னடி ஆச்சு? அங்கிளுக்கு என் னாச்சு. அழாதே முதல்ல கண்ணைத் துடை.''

''அப்பாக்கு ஹார்ட் அட்டாக்காம். ஹாஸ்பிடல்ல அட்மிட் பண்ணிருக்காங் களாம். ரொம்ப சீரியஸா இருக்காராம்.'' மாயா குலுங்கி அழ ஆரம்பித்து விட்டாள்.

திவ்யா அதற்குள் ராஜாவுக்கு ஃபோன் செய்தாள். விஷயத்தைச் சொல்லி, அவனை உடனடியாக வரும் படி சொன்னாள்.

அதற்குள் மறுபடி மாயாவின் ஃபோன் அடித்தது. நடுக்கத்துடன் எடுத்தாள். ''என்னது முடிஞ்சிருச்சா... அப்பா போய்ட்டாங்களா.'' அழுதபடி அவள் ஃபோனைக் கீழே போட்டுவிட்டு அப்படியே மடங்கி அழ ஆரம்பித்து விட்டாள். எட்டு மாத வயிறு குலுங்கியது.

திவ்யா அவளுடைய பெட்டியை எடுத்து, துணிகளை அடுக்கி வைத்தாள். அவளுடைய மாத்திரைகளை எடுத்து வைத்தாள். டிராவல்ஸுக்கு ஃபோன் பண்ணி, மதுரைக்கு இரண்டு டிக்கெட்டு கள் புக் செய்தாள். எவ்வளவு சொல்லியும் மாயாவின் அழுகை நிற்கவில்லை. அவள் அப்படித் துடிதுடிப்பதைப் பார்க்க திவ்யா வுக்கு மிகவும் சங்கடமாக இருந்தது.

''இங்க பாருடி, உன் துக்கம் என்னன்னு எனக்குப் புரியுது. ஈடு செய்ய முடியாத இழப்பைத்தான் நீ இப்ப சந்திச்சிருக்கே.



எந்த வார்த்தையும் உன் காயத்துக்கு மருந்தாகாது. எல்லாம் எனக்குத் தெரியும். ஆனாலும் சொல்றேன். கொஞ்சம் மனசைத் திடப்படுத்திக்கோ. உனக்குள்ள இன்னொரு ஜீவன் இருக்கு. நீ இப்படி அழுது உன்னை வருத்திக்கிட்டேனா, அதுவும் பாதிக்கப்படும். புரிஞ்சுதா. போனவங்க எவ்வளவு நெருக்கமானவங்களா இருந்தாலும், போனவங்கதான். கடைசியா போய் அவரைப் பாக்கறதுக்கு உனக்குத் தெம்பு வேணும் இல்லியா. 12 மணிநேரம் வேற டிராவல் பண்ணனும். கமான். அழுது புலம்பிட்டு இருந்தா இப்படியே இருக்க வேண்டியதுதான். நீ அழு, நான் தடுக்கலை. ஆனால் அதைக் கொஞ்சம் இப்போதைக்குக் கட்டுப்படுத்திக்கோடி. மதியத்திலர்ந்து மனசு சரியில்லைன்னு சொன்னேயில்லை. உன் உள்ளுணர்வு, உன் அப்பா போனதை உனக்குச் சொல்லிடுச்சு. மனசுதான்டி எல்லாத்துக்கும் காரணம். அதைப் பக்குவமா வச்சுக்கிடணும். அப்பாவோட ஆசிர்வாதம் எப்பவும் உனக்கு இருக்கும். நான் சொல்றது எல்லாம் உன் நல்லதுக்குத்தான். ப்ளீஸ் புரிஞ்சுக்கோ.

மெதுவாகத் தலையாட்டினாள். ராஜுவும் வந்துவிடவே, அவனுக்கு ஒரு டீ போட்டுக் கொடுத்தாள் திவ்யா.

மாயாவின் முகத்தை டவலால் துடைத்து, ஒரு வாய் டீ குடிக்க வைத்து, அவளை இருவரும் கைத்தாங்கலாக காருக்கு அழைத்துச் சென்றார்கள்.

மாயாவின் கைகளை அழுத்தமாகப் பற்றி ஈரம் தோய்ந்த அவள் விழிகளைப் பார்த்துச் சொன்னாள் திவ்யா, ''பத்திரமா போய்ட்டு வா. நான் சொன்னேன்னு மனசுக்குள்ள துக்கத்தை மறைச்சு வைச்சுக்காத, அதுவும் கஷ்டம்தான். அழுதுடு. ஆனா, நான் சொன்னது ஞாபகம் வச்சுக்க. வாழ்க்கைல சில கணங்களை நாம அப்படியேத்தான் சந்திக்கணும். சரியா. நாளைக்கு ஃபோன் பண்றேன்.''

அவர்கள் கார் கிளம்பி புள்ளியாக மறைந்தது.

●



**'நா**ன் வரைந்த சூரியன் ஒளிர்கிறதே... நான் நடந்த மணல்வெளி மலர்கிறதே...' என்ற ஒரு பாடலுக்காக உஸ்பெகிஸ்தான் நாட்டுக்குச் சென்று வந்திருக்கிறது 'ஜெயங்கொண்டான்' படக்குழு. அந்தப் பாடலைப் படம் பிடித்த அனுபவம் எப்படி இருந்தது? சொல்கிறார் இயக்குநர் கண்ணன்.

''இதுவரை இந்திய சினிமா போய்வராத பிரதேசத்தில் படம் பிடிக்க எண்ணித்தான் நெட்டில் தேடினேன். அப்போது சிக்கிய பிரதேசம் உஸ்பெகிஸ்தான். அப்படியே முப்பது வருஷங்களுக்கு முற்பட்ட சென்னை போலவே இருக்கிறது. நெரிசல் அற்ற சாலைகள், மாசு கலக்காத காற்று, மரங்கள் அடர்ந்த ஏகாந்தம் என எங்கும் உற்சாகப்படுத்தும் காரணிகள் அதிகம். உஸ்பெகிஸ்தான் தலைநகர் தாஸ்கண்ட்லயும், அங்கிருந்து 300 கிலோமீட்டர் தொலைவிலுள்ள சமர்கண்ட்லயும் படம் பிடிச்சோம். அங்க இருக்கிற மக்கள் இந்திய சினிமான்னதும் ஆர்வமா இயக்குநர் ராஜ்கபூரையும், நடிகர் அமிதாப்பச்சனையும் விசாரிக்க ஆரம்பிச்சுட்டாங்க. இந்திய சினிமா ரஷ்யாவில பிரபலமாயிருக்குங்கறது சந்தோஷமான விஷயம்தானே. ஹீரோயின் பாவனாவின் அழகில் மயங்கிய ரஷ்ய ரசிகர்கள் அவரோடு புகைப்படம் எடுத்துக்கொண்டது ஜாலியான அனுபவம். உஸ்பெகிஸ்தான் மக்களுக்கு ஆங்கிலம் சரிவர தெரியாமலிருந்ததால் படப்பிடிப்பில் சில சிரமங்களை அனுபவிக்க நேர்ந்தது'' என்கிறார் கண்ணன். இவர் இயக்குநர் மணிரத்னத்திடம் 12 வருடங்களாக உதவி இயக்குநராகப் பணிபுரிந்திருக்கிறார். குருவின் பெயரைக் காப்பாற்றுவாரா?

**- அசாருதீன்**

...வித்திட்ட நம்பிக்கை விதை
...ள் விருட்சமாய்... விசாலமாய்!

...ீ குமரன் இப்போது ஈரோட்டிலேயே
...ம்மாண்டமான புதிய கட்டிடத்தில்
...து சேவையை துவங்குகிறது




கடையுடன் கூடிய விலாசமான கார் பார்க்கிங்

தனி மனுஷியின் வெற்றி, தேசத்தின் சாதனையாவதும் எந்த மண்ணில் முளைத்தோமோ அதே மண்ணுக்குப் புகழை உரமாக்கி, பூரிப்படைவதும் எத்தனை ஆனந்தம்!

எல்லோருக்கும் வாய்க்காத இந்தத் தேசத்துக்கான அரிய பங்களிப்பு, நீச்சல் வீராங்கனை ஐஸ்வர்யாவுக்குச் சாத்தியமாகியிருக்கிறது. சமீபத்தில் பாகிஸ்தானில் நடந்த சர்வதேச நீச்சல் போட்டியில் வெள்ளிப் பதக்கத்தையும் வென்று இருக்கிறார்.

''நீச்சலாலேயே என் வாழ்வு நிரப்பப்பட்டுள்ளது. நான் பொறியாளராக வேண்டுமென்பது ஆசைதான். ஆனால் அதனால் நீச்சல் பாதிக்குமெனில், அந்த ஆசையையும் விட்டுவிடுவேன்'' என்று தன்னோடு இரண்டறக் கலந்துவிட்ட நீச்சலை நமக்கு அடையாளம் காட்டுகிறார்.

பொழுதுபோக்காக நீச்சல் கற்கத் துவங்கி, பிறகு நீச்சல் பயிற்சியாளரான அப்பாவின் மாணவர்களைப் பார்த்து ஆர்வம் மேலிட, நாமும் ஏதாவது செய்ய வேண்டும் என்ற உந்துதலில் இன்று இவர் நீச்சலில்... பின் பக்க நீந்துதலில் கில்லாடி.

பதினொராம் வகுப்பு படிக்கும் ஐஸ்வர்யாவுக்கு, பத்து வருட அனுபவம் நீச்சலில். வகுப்புக்கும் தேர்வுக்கும் சரியாகச் செல்ல முடியாத காலங்களில் மாலை வகுப்பென்றும், ஒய்வு நேரத்தில் தேர்வு என்றும், விசேஷ சலுகைகள் அளிக்கப்பட்டுள்ளன இந்த வீராங்கனைக்கு. அதனாலேயே தனது வெள்ளிப் பதக்க வெற்றிக்குப் பள்ளி நிர்வாகத்தை முன்னிலைப்படுத்துகிறார்.

நீச்சலில் ஜுனியர் பிரிவில் விளையாடும் இவருக்கு ரோல் மாடல், இந்தியாவின் நம்பர் ஒன் நீச்சல் வீராங்கனை சிக்கா டாண்டன்தான். ஐஸ்வர்யா இதுவரை நூறுக்கு மேற்பட்ட போட்டிகளில் கலந்து கொண்டு 240 பதக்கங்கள் பெற்றுள்ளார். இதில் தேசிய அளவில் மட்டும் முப்பது பதக்கங்கள்!

''சர்வதேசப் போட்டியில் இலங்கை வீராங்கனை எனக்குச் சரியான போட்டியாக இருந்தார். நீண்ட போராட்டத்துக்குப் பிறகே இலங்கையை வென்று வெள்ளிப் பதக்கம் பெற்றேன்'' என்று பூரிக்கிறார் ஐஸ்வர்யா.

இந்தச் சிறு வயதில் வெளிச்ச வெற்றியைக் கைப்பற்ற வைத்தது எது?



★ பெற்றோருடன் ஐஸ்வர்யா

# ''இலங்கையை

மிக தீர்க்கமாய், ''மூன்று அம்சங்கள் கட்டாயம் வேணும். ஒன்று, பயிற்சியுடனான உழைப்பு; இரண்டு, திட்டமிட்ட உழைப்பு; மூன்று, தளராத உழைப்பு'' என்கிறார்.

''உங்களின் இந்தச் சாதனையில் ஏற்பட்ட இழப்பு...'' என்று இழுப்பதற்குள், குறுக்கிட்டு, ''இழப்பில்லாமல்

# ஜெயித்தேன்!''

## - 'நீச்சல் வீராங்கனை' ஐஸ்வர்யா பெருமிதம்

எப்படிச் சாதிக்க முடியும்? பல வருடங்களாகச் சொந்த ஊர் மண் வாசனையைச் சுவாசிக்கவில்லை. உறவுக்காரர்களின் விசேஷங்களுக்கான வருகைப் பட்டியலில் என் பெயரில்லை. இவ்வளவு ஏன், எப்போதும் தண்ணீரிலே இருக்கும் நான், பீச் பக்கம் காற்றுவாங்கி பல நாட்களாகிவிட்டன. பார்க், சினிமா என்று கேட்பதோடு சரி... செல்வதில்லை. ஆனால், இந்தச் சின்னச் சின்ன இழப்புகளுக்கு அப்பால்தான் சாதனை வெளிச்சம் சாத்தியமாகும்'' என்று பக்குவத்துடன் கூறுகிறார்.

இப்படி ஐஸ்வர்யாவே பேசினால்... 'குரு'விடம் (அப்பாவிடம்) சில வார்த்தைகள் பேச வேண்டாமா என்று நினைத்து...

''இன்று நீச்சல் நல்ல அங்கீகார அந்தஸ்தைப் பெற்றுள்ளதாகக் கருதுகிறீர்களா?'' என்றபோது, ''நிச்சயமாக. நீச்சல் கலை பன்மடங்கு சிறப்பு பெற்று விளையாட்டுத்துறையில் மதிப்போடு விளங்குகிறது. அதற்குக் காரணம், அரசாங்கம் நீச்சல் குளங்களை மாவட்ட ரீதியாக அமைத்திருப்பது மட்டுமின்றி, பயிற்சியாளர்களையும், விளையாட்டு கோட்டா, நிதியுதவியென பல சலுகைகளையும் வழங்கியிருப்பதுதான்'' என்கிறார்.

வீராங்கனை ஐஸ்வர்யாவிடம் பிரத்யேக உணவு முறை எப்படி என்றதற்கு, ''ஒரு நாளைக்கு 120 கிராம் புரோட்டீன் சத்துக்கள் எனக்குத் தேவை. அதைக் கணக்கிட்டே உண்பேன். பெரும்பாலும் குளிர்பானங்களைத் தவிர்த்துவிடுவேன்'' என்கிறார்.

''உங்களின் இந்த வெற்றிக்குத் துணை புரிந்தது எது? யார்?'' கேட்டு முடிப்பதற்குள்...

''எனது பூஸ்ட் - என் பெற்றோர்கள். என் எனர்ஜி - நண்பர்களும் ஆசிரியர்களும்தான்'' என்று சுருக்கமான ஸ்வீட் டயலாக் தருகிறார்.

ஒலிம்பிக்குக்குத் தேர்வாகி தங்கம் அள்ள புஷ்டியான வாழ்த்துகள்!

செய்தி, சித்திரம் : **வெ.ஜனனி**

**தெ**ன்காசிக்கு அருகிலுள்ள ஆலங்குளத்துக்குப் பக்கத்து கிராமம். அங்கே ஒரு மூதாட்டி, தனக்குத் தானே கல்லறை கட்டிக்கொண்டு, அந்த இரகசிய தினத்தை எதிர்பார்த்து காத்திருக்கிறார். தற்சமயம் அந்தக் கல்லறையின் மேற்பகுதியை சமையல் தளமாகப் பயன்படுத்தி வருகிறார்! - இப்படிக் கேள்விப்பட்டு, அவர் இருக்கும் இடம் தேடிச் சென்றோம்.

ஆலங்குளம் அருகே இருந்த டீ கடையில் விசாரித்துக்கொண்டிருந்த போது, அங்கே வந்த சிறுவன் ''அண்ணே, வெள்ளையம்மா பாட்டி வீடுதானே நான் காட்டுகிறேன்'' என்றான். சிறிது தூரம் நடைக்குப் பின் சிறுவன் தூரத்தில் சுட்டிக் காட்டிய வீடு, ஊரின் ஒதுக்குப் புறத்தில் தனி வீடாக உயர்ந்து நின்றது. ஒரு நவீன வீட்டின் அம்சங்கள் அத்தனையும் நிறைந்த, சலவைக் கல் தரை பளபளக்க, செல்வச் செழிப்பின் அடையாளமாக ஆனால், அமைதியாக மனித நடமாட்டமே இல்லாதிருந்தது!

வீட்டின் முகப்பில் வைக்கப்பட்டிருந்த கல்வெட்டில்

***'தேட பிள்ளை இல்லை...***
***தேசம் ஆள பிள்ளை இல்லை...***
***சொக்காரன் நாதம் இல்லை...'***

என்ற வரிகள் அவரைப் படம் பிடித்துக் காட்டின!

தயங்கியபடியே வீட்டின் கதவைத் தட்டினோம். ''யார்?'' என்ற கேள்வியோடு பஞ்சு வண்ணத் தலைமுடியோடு கண்களை இடுக்கிப் பார்த்தபடியே வெளிப்பட்ட மூதாட்டி, ''நீ யார் ஐயா? தெரியவில்லையே?'' என்றார். விவரம் சொன்னதும்,

சற்றுச் சலித்த குரலில், ''எதுக்கைய்யா அந்தச் சோகத்தைத் திரும்பவும் கிளறுறீங்க?'' என்றபடியே அருவிபோல் தடையில்லாது கடந்த கால நினைவுகளை வார்த்தைகளாகக் கொட்டினார்.

''அறியாப் பருவத்தில் குத்தாலிங்க நாடாரோடு எனக்குத் திருமணம் நடந்தது. வயல் வேலையில் அவருக்குத் துணையாக நானும் போவதுண்டு. முதல் குழந்தை ஆண் குழந்தை. எங்களுக்குச் சந்தோஷம் தாங்கல. அதிகமாகவே சந்தோஷப்பட்டுவிட்டோமோ என்னவோ? மகன் பிறந்த சில மாதங்களிலேயே ஒருநாள் பொசுக்குன்னு போய்ச் சேர்ந்துட்டார் அவர்.

''அவர் உடலை முன் வீட்டில் கிடத்தி வைத்து நானும், பிள்ளையும் மட்டும் இருந்தோம். சொந்தம், பந்தம், ஊர் ஜனங்கள் யாரும் எட்டிப் பார்க்கல்லை!? அவருக்கு இறுதிச் சடங்குக்குக்கூட நாதியற்றுக் கிடந்தேன்'' எனச் சொல்லும்போதே கண்களில் வடிந்த கண்ணீரை, புடைவைத் தலைப்பால் துடைத்துக்கொண்டார். ''இந்த நிலை எந்தப் பெண்மணிக்கும் வரக்கூடாது'' என்றவர், ''சில மாதங்கள் மகன் செல்லதுரையின் முகம் பார்த்து,



# அடக்கம் செய்ய

மனத்தைத் தேத்திக்கொண்டேன். கையிருப்பும் கரைந்துகொண்டு இருந்தது. தாலி அறுத்த எனக்கு உதவ எந்தச் சொந்தமும் வரவில்லை. பணம் இல்லாதவளைப் பிணத்துக்குச் சமமாகத் தானே இந்தப் பொல்லாத உலகம் பார்த்தது.

''ஜாண் பிள்ளை என்றாலும் எனக்கு ஆண் பிள்ளை இருக்கிறது என்ற நம்பிக்கை இருந்தது. அவர் இருக்கும்போது விட்டுவிட்டுப் போனது, வெறும் எட்டு மரக்கால் நெல்லும் ஆயிரம் ரூபாயும்தான்.

''வீட்டில் இருந்த அனைத்தையும் விற்று, ஒரு சிறு நிலம் வாங்கினேன். நிலத்தில் தினம் தினம் மாடுபோல் உழைத்தேன். இடுப்புப் பிள்ளையைக் காட்டு மரத்தில் தொட்டில் கட்டிப் போட்டு விட்டு, வேலை செய்தேன். விட்ட சொந்தங்கள் எல்லாம், என்னைப் பார்த்து மூக்கு மீது விரல் வைக்கும் நிலைக்குச் சம்பாதித்தேன். உழைப்பைச் செல்வமாக மாற்றிய ஈசன், என் செல்வம் செல்லதுரையைப் பிடுங்கிக்கிட்டான். துவண்டே போனேன். கணவர் இறந்தபோதுகூட இப்படி வருத்தப்படலை.

''செல்லதுரை பிறக்கும்போதே புத்தி வளர்ச்சியில்லாத குழந்தையாக இருந்தான். புத்தி சுவாதீனம் இல்லாத பிள்ளை, இந்தப் பொல்லாத உலகில் வாழ முடியாது.'' போனது நல்லதுக்குதான் என்று தனக்குத்தானே சமாதானம் சொல்லிகொண்டார்.

''மகன் செல்லதுரையைப் பிரிந்து நான் மட்டும் தனியாக இந்த வீட்டில் இருக்கக் கூடாது என்ற நினைப்பு வரவே, செல்லதுரையை வீட்டுக்குள்ளே கல்லறை கட்டி வைத்துவிட்டு, எனக்கும் அவன் பக்கத்தில் கல்லறை கட்டிக் கொண்டேன். மகன் கல்லறைக்குத் தினம் மாலை போட்டு தெய்வமாய் வணங்குகிறேன்.''

''உங்களுக்குப் பின் இந்த வீட்டை, சொத்துக்களை யார் கவனித்துக் கொள்வார்கள்?'' என்றோம்.

''நேரம் காலம் பாராமல் உழைத்து இப்ப பேங்கில் ரூ.5 இலட்சம் சேர்த்து வைத்திருக்கிறேன். பசையிருக்குன்னு தெரிந்ததும், சில உறவுகள் சொந்தம் கொண்டாட வந்தாங்க. என் புருஷன் போன அன்னைக்கே வராத சொந்தக்காரங்க எந்தப் பயலையும் உள்ளே சேர்த்துக்கல. கல்லறையில தூங்கும் மகன்தான் இப்போதைக்கும் துணை. எப்பவும் என் அடி மனத்தில் ஒரு நம்பிக்கை இருக்கு. என் கண் மூடும் முன்னே என் மகன் இடத்துக்கு ஒரு நல்லவன் வருவான். எனக்குப் பின் இந்த இடத்தைப் பராமரிக்க, என் உசுரு போனதும் இந்த உடலை நான் கட்டியுள்ள கல்லறையில் எடுத்துப் போட, ஒரு மகன் வருவான்...! நான் நம்பும் கடவுள் அவனை எனக்குக் காட்டுவான்.'' மூதாட்டி வெள்ளையம்மாள் நம்பிக்கையோடு தேடும் அந்த மனிதன் யாரோ? என்றைக்கு வருவானோ?

செய்தியும் படமும்:

**த.இ.தாகூர்**



# மகனைத் தேடி...

# டிஜிட்டல் கேன்டீன் 14

# என் வாழ்வு

'ரெண்டு ஜி, மூணு ஜி, ரெண்டரை ஜி' என்று யாராவது பேசிக்கொண்டிருப்பதைக் கேட்க நேர்ந்தால், உடனடியாகப் புரிந்துகொள்ள வேண்டியது அவர்கள் யாரும் ஹிந்தி பண்டிட் இல்லை என்பதை. மொபைல் தொலைபேசி விற்பன்னர்களின் பரிபாஷை இதெல்லாம். ரெண்டாம் தலைமுறை, மூணாம் தலைமுறை என்பதைக் குறிக்கும் ஜெனரேஷன் என்ற ஆங்கிலப் பதத்தின் ஒரெழுத்துச் சுருக்கம் இந்த ஜி.

ஆதியில் (அதாவது 20 வருடங்களுக்கு முன்) மொபைல் தொலைபேசி சேவை தொடங்கியபோது, அது சாதா தொலைபேசி மாதிரிதான் இருந்தது. பேசினால் ஏற்படும் ஒலியலை அப்படியே மின்னலையாக மாறி காற்றில் பயணம் செய்து, இன்னொரு தொலைபேசியை அடையும்போது திரும்ப ஒலி- 'ஹலோ, ஹலோ'. 1990-களில் பல நாடுகளிலும் மொபைல் சேவை இப்படியான அனலாக் முறையிலிருந்து டிஜிட்டல் முறைக்கு மாறியது. இந்த டிஜிட்டல்தான் 2-G. ஏற்கெனவே புழங்கி வந்த அனலாக் சேவைக்கு 1-G என்று பெயர் கிடைத்தது. 1991-ல் பின்லாந்து நாட்டில்தான் 2-G வெற்றிகரமான அறிமுகம்.

2-G மொபைல் சேவையில், டிஜிட்டல் ஆக்கப்படும் ஒலி கூடவே பூடகமாக்கவும் (encryption) படுகிறது. அதனால், சேர வேண்டிய தொலைபேசி தவிர வேறு செல்ஃபோனில் இருந்து ஒட்டுக் கேட்பது சிரமம். ஒலியும் அனலாக் சேவையைவிடத் துல்லியமாக இருக்கும். கூடவே இன்னொரு நன்மை. எண்மப்படுத்தும்போது, ஒலியலை குறுக்கப்படுவதால், செல்ஃபோன் கம்பெனிகள் ஒரே சேனலில் நிறைய உரையாடல்களை ஒரே நேரத்தில் கையாள முடியும். செல்ஃபோனிலும் குறைவான மின்சாரமே செலவாவதால் பாட்டரி ஆயுள் நீடிக்கும்.

2-G ஒலி துல்லியமாக இருந்தாலும், காத்திரமாக இருக்க வாய்ப்பு குறைச்சல். டிஜிட்டைஸ் பண்ணும்போது குரலின் கனம் தொலைந்து போவதோடு, சிக்னல் சரியாக எடுக்காத இடங்களில் சுத்தமாகப் பேச்சு கேட்காது. பழமையான அனலாக் தொலைபேசிகளில் பத்துக்கு ரெண்டு வார்த்தையாவது கேட்கும். 'மாமியார்', 'சண்டே', 'ராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ்' என்று விட்டு விட்டுக் காதில் விழுந்தாலும் வரப்போகிற அபாயம் புரிந்து எஸ்கேப் ஆக அனலாக் வழி செய்யும்.

2-Gயில் இரண்டு வகைகள் உண்டு. டைம் டிவிஷன் மல்ட்டிபிள் அக்செஸ் (TDMA) என்ற, நேரத்தைக் கூறு போட்டு ஒலி

இரா. முருகன்

யலைகளை அனுப்பும் முறை. மற்றது கோட் டிவிஷன் மல்டிபிள் அக்செஸ் (CDMA) என்ற சிக்னலைப் பகிர்ந்து அனுப்பும் முறை. அமெரிக்கா மட்டும் விடாப் பிடியாக சி.டி.எம்.ஏயில் நிலைத்து நிற்க, மற்ற நாடுகளில் டி.டி.எம்.ஏ சேவையே பிரதானம். எந்த அக்செஸ் முறையாக இருந்தாலும், ஒலியை அனுப்புவதோடு தகவலையும் (Data) பகிர்ந்துகொள்ள 2 - G வழி செய்தபோது, அது ரெண்டரை ஜி ஆனது. இன்டர்நெட்டில் மொபைல் மூலம் இணைந்து இணைய தளங்களிலிருந்து தகவல் இறக்கவும் இது வழி

# உன்னோடுதான்!

செய்யும். தகவல் அனுப்ப, அதன் அளவைப் பொறுத்து கட்டணம் இருப்பதோடு, சேவை இணைப்பும் மாறுபடலாம்.

ஜப்பானிலும் தொடர்ந்து கொரியாவிலும் 2001-ல் அறிமுகமானது 3-G. மொபைல் தொலைபேசி மூலம் பேசவும், டிஜிட்டல் காமராவாகப் பயன்படுத்திப் படம் எடுக்கவும் இ-மெயில் அனுப்பவும் 2-Gயில் முடியும் என்றால், 3-G இதுக்கு மேலே.

ஜப்பானிய நிறுவனமான டொகொமோ மொபைல் தொலைபேசியின் சிம் கார்டிலேயே கடன் அட்டை நகலையும் பொதிந்து வைக்க வகை செய்கிறதாம். செல்ஃபோனை மட்டும் எடுத்துப் போய் கிரெடிட் கார்டில் பற்று எழுதி, மாதாந்திர மளிகைப் பொருட்களை வாங்கி வந்துவிடலாம். இதேபோல் மொபைலில் ரயில்வே சீசன் டிக்கட்டும் இடம் பெறுவதால், க்யூவில் காத்திருக்காமல் குறுஞ்செய்தி அனுப்பி ரயிலில் ஏறிவிடலாம். சினிமா போக, வண்டிக்குப் பெட்ரோல் போட, வங்கி ஏ.டி.எம்.மில் பணம் எடுக்க, ஹோட்டல் சாப்பாட்டுக்குக் காசு தர, மொபைலே துணை! இனி வாழ்க்கைக்குப் பெண் பார்க்கும் படலம் போல மொபைல் தேடலும் அவசியமாகி 'மொபைல் இன்றி அமையாது வாழ்வு' என்ற புதுக்குறள் நிலைத்தாலும் ஆச்சரியமில்லை.

வருங்காலத்தில் 'ஆஃபீஸ் முடிஞ்சு வீட்டுக்கு வர ஏன் இத்தனை நேரம்?' என்று மனைவி, காத்திரமான குரல் மட்டும் விட்டு அதிகாரம் செய்யாமல், மொபைலிலேயே கண்ணையும் உருட்டி முழிக்க முடியும் என்பதால், பயந்த சுபாவமுள்ள கணவர்கள் 3-Gக்கு மாறுவதைச் சற்றுத் தள்ளிப் போடுவது நல்லது.





# கடன்

சிவராமன், தன் தம்பி பாலன் வீட்டுக்குள் நுழையும் முன்னே, அவரது மனைவி சொன்னது மீண்டும் ஞாபகத்துக்கு வந்தது. 'இங்க பாருங்க... இந்தத் தடவ வெறுங்கையோட வந்தீங்க... அவ்வளவுதான்! ஏதோ சொந்த வீடு கட்டறார்னு எனாமா பத்தாயிரம் தந்தீங்க. சரி, அப்புறம் கடனா முப்பதாயிரம் கேட்டாங்க. நீங்களும் பாசத்துல உருகி தந்தீங்க. இப்ப என்னாச்சு...? ரெண்டு வருஷமா இதோ... அதோன்னு இழுத்தடிக்கறாங்க. இங்க என்ன கொட்டியா கெடக்கு? உங்களுக்குச் சங்கடமா இருந்தா... சொல்லுங்க... நானே ஃபோன்ல கேக்கறேன்... கடன்னா... அது கடன்தான்!'

சிவராமனைப் பார்த்ததும் தம்பி குஷியானான். ''மல்லிகா... அண்ணன் வந்திருக்காரு. நான் போய் தக்காளி வாங்கிட்டு வர்றேன். அவருக்குத் தக்காளிக் கூட்டுன்னா உசிரு!'' மனைவியிடம் கட்டளையிட்டு விட்டு, பையைத் தூக்கிக்கொண்டு வெளியேறினான் பாலன்.

சிவராமன் உள்ளுக்குள் மருகினார். இவனிடம் எப்படி கடனை... கறாராகக் கேட்க முடியும்...? ''வேறு வேலையாக வந்தேன்'' என்று மல்லிகாவிடம் சாதாரணமாகவே பேசினார். அரை மணியில் கூட்டும் சாதமும் ரெடியானது. தம்பியிடமும் பேசினார்.

ஏனோ அன்று தக்காளிக்கூட்டை அவர் வெகுவாக ரசித்துச் சாப்பிடவில்லை. அதை மல்லிகாவும் கவனிக்கத் தவறவில்லை.

கொல்லைப்புறத்தில் கையைக் கழுவும்போது... மல்லிகா மெல்லச் சொன்னாள்... ''அக்காகிட்ட சொல்லுங்க, மூணு மாசத்துல கண்டிப்பா பணத்தத் தந்திடுவோம்னு!''

''அதுக்கென்ன இப்போ...?'' என்று... இருவரிடமும் விடை பெற்று சிவராமன் கிளம்பினார். வழியில் தன் நண்பனுக்கு ஃபோன் செய்தார். ''ஆமாம்பா... ரொம்ப அவசரம்... முப்பதாயிரம்... மூணு வட்டிகூட தர்றேன். என்ன, அப்படி என்ன அவசரமா...? ஒரு உடன்பிறந்த கடன். தீக்கணும்... ம்...ரொம்ப தேங்ஸ்ப்பா... இப்ப வர்றேன்...'' தம்பி பணம் கொடுத்து விட்டதாய் மனைவிக்கு ஃபோன் செய்ய, மீண்டும் டயலைச் சுழற்றினார் சிவராமன்.

கே.கீதா

புத்தக விமர்சனம்

# சிலிர்ப்பூட்டும் பூமி!




**குருக்ஷேத்ரம்- அருண் சரண்யா, விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 02. விலை ரூ.50/-**

புண்ணிய தலமான குருக்ஷேத்ரப் பயணத்தை, சில கற்பனைப் பாத்திரங்கள் பார்வையில் கூறும் தொகுப்பு. புது யுக்தியால் புனிதம் கெடாமல் கவனம் கொண்டுள்ளார் நூலாசிரியர்; தம் எளிய நடையில் மகாபாரதப் போரின்போது அங்கு நடந்த ஒவ்வொரு நிகழ்வையும் அற்புதமாக காட்சிப்படுத்தி, வியக்கச் செய்கிறார். நூலை வாசிக்கும்போது, நாமும் அப் புண்ணிய பூமியில் கால் பதித்த மாதிரி சிலிர்ப்பு உண்டாகிறது!







**பாடல் பிறந்த கதை - கவிஞர் முத்துலிங்கம், குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.75/-**

தமது பாடல்கள் பிறந்த கதைகளைப் பதிவு செய்துள்ளார் கவிஞர். இனிமையான பழைய திரைப்படப் பாடல்களைப் படைத்த பாடலாசிரியர்கள் பற்றியும் பல சுவையான தகவல்களை வழங்கியுள்ளார். நெஞ்சில் நிறைந்த பழைய திரைப்படப் பாடல்களை நினைவூட்டும் நூல்!




**ஊனமுற்றோரின் உயரிய சாதனைகள் - கவிஞர் ஏகலைவன், மணிமேகலைப் பிரசுரம், த.பெ. எண் : 1447, 7 (ப.எண்.4), தணிகாசலம் சாலை, தியாகராஜ நகர், சென்னை - 17. விலை ரூ.60/-**

மாற்றுத் திறன் கொண்ட பத்து சாதனையாளர்களின் பேட்டி. சாதனையாளர்கள், தங்கள் கல்வி, பணி, பொது வாழ்வில் புரிந்த சாதனை போன்ற தகவல்களுடன், மாற்றுத் திறன் கொண்டவர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டும் ஆலோசனைகளையும் வழங்கியுள்ளனர். உடல் ஊன முற்றோர் நலனில் அக்கறை காட்டும் பல அமைப்புகளின் முகவரித் தொகுப்புகளும் நூலில் அளிக்கப்பட்டுள்ளன.

**ஆத்திசூடியில் நிர்வாகம் - டாக்டர் நல்லி குப்புசாமி செட்டியார், ப்ரெய்ன் பேங்க், 16/2, ஜெகதாம்பாள் தெரு, தி.நகர், சென்னை - 600 017. விலை ரூ.45/-**

பாரதியாரின் புதிய ஆத்திசூடியை, ஔவையாரின் ஆத்திசூடியோடு ஒப்பிட்டு எழுதப்பட்டுள்ள புத்தகம். பல அறிவுரைகள் இரு ஆத்திசூடிகளிலும் இணங்கிப் போனாலும், பாரதியார் ஔவையாரின் கருத்துகளிலிருந்து எப்படி வேறுபடுகிறார் என்பதை விளக்கியுள்ளார் நூலாசிரியர். நிர்வாகத்தில் திறமையுடன் செயல்பட விரும்புவோருக்கான நீதி வாசகங்களைத் தொகுத்தளித்துள்ளார்.

- மித்ரா

# ஆஹா... யோகா...



‘‘மானுட வாழ்க்கையே ஒரு வரம்! அதை ஏனோ தானோன்னு வாழ்ந்துட்டுப் போறது எந்த வகையிலே நியாயம்? வாழ்க்கையைக் கொண்டாட வேணும் தான்! ஆனா, எப்படி வேணாலும் வாழலாம்னு நினைச்சு உடம்பையும் மனசையும் கெடுத்துக்கறது, நமக்குக் கிடைச்ச வாழ்க்கையை உதாசீனப்படுத்தறது மாதிரி!'' என்கிறார் 'வேதிக் யோகா' போதிக்கும் ஆச்சார்ய கிருஷ்ண வர்மா.

‘‘காசு பணம், சொத்து சுகம்னு வாழ்க்கையை வளமாக்க நினைக்கறது எவ்வளவு முக்கியமோ, அதைவிட முக்கியமானது உடலையும் மனத்தையும் ஆரோக்கியமா வெச்சுக்கறதுதான்! இந்த வாழ்க்கையைக் கொண்டாட உடல் வேணுமில்லையா? சுவர் இருந்தால்தானே சித்திரம்!

உடம்பை உறுதிப்படுத்தத்தான் நம்ம முன்னோர்கள் யோக சாத்திரத்தையும் ஆசனங்களையும் கண்டுபிடிச்சிருக்காங்க. 'வேதிக் யோகா'வைப் பொருத்தவரைக்கும் 'அஷ்டாங்க யோகம்'னு சொல்லக்கூடிய எட்டுவிதமான யோக நிலைக்கு நாங்க முக்கியத்துவம் தர்றோம்.

'யோகா'ன்னு சொன்னாலே உடம்பை வில்லா வளைச்சு, நம்மால முடியாததையெல்லாம் முயற்சி பண்ண வைக்கற வில்லங்கமான வேலைன்னு பல பேர் நினைச்சுடறாங்க. உண்மையில் 'யோகா'ங்கறது அப்படியல்ல; உணவு, தண்ணீர், சுவாசம் இந்த மூன்றையும் தவிர்த்துவிட்டு வாழ்க்கையை யாராவது நினைச்சுப் பார்க்க முடியுமா? இந்த மூன்றையும் உடம்புக்குத் தேவைப்படும் விதத்தில் முறைப்படுத்தித் தர்றதுக்குத்தான் 'யோகா' தேவைப்படுது.

அதாவது, நாம் உட்கொள்ளும் உணவு, நீர், காற்றில் இருக்கற நச்சுத்தன்மையுடைய பொருட்களை 'நாடி சுத்தி' முறையிலே வெளியேற்றி, உணவு, நீர், காற்றில் இருக்கற உயிர்ச் சக்தியை நம்ம உடம்புக்குள் பெருக்கிக் கொள்ளும், அடிப்படை யோக முறையிலிருந்துதான் 'வேதிக் யோகா'வைத் துவங்கறோம். முதல் ஐந்து நாள் வகுப்பிலேயே இதை யார் வேணாலும் ரொம்ப சுலபமா கத்துக்கலாம்!''



‘‘யோக சாத்திரத்தில் மனசுக்கு ரொம்பவும் முக்கியத்துவம் இருக்கு. 'மனோவிகாரம்'னு சொல்வாங்க. சும்மா சும்மா கோபம் வரும். டென்ஷன் பார்ட்டியா இருக்கறவங்களுக்கு 'யோகா' ரொம்ப ரொம்ப அவசியமானது!''

# டென்ஷன் பார்ட்டியா நீங்க? உங்களுக்கு யோகா ரொம்பவும் அவசியம்!



✱ ஆச்சார்ய கிருஷ்ண வர்மா

என்று அறிவுறுத்துகிறார் கிருஷ்ண வர்மா.

''பொதுவா பல பேர் கிட்ட இருக்கற கெட்ட பழக்கம் என்னன்னா, உடம்புக்கு ஏதாவது நோய் நொடின்னு வந்துட்டா, டாக்டர் இருக்கிறார்; அவர் பார்த்துப்பார்னு நினைக்கறாங்க. வலின்னு வந்துட்டா, இருக்கவே இருக்கு 'பெயின் கில்லர்' மாத்திரைகள்னு நினைக்கறாங்க.

ஆனா, நோய் வந்தபின் வாடறதைவிட, நோய்க்கு நேரம், பொருள்னு வாழ்க்கையை விரயம் பண்றதை விட, 'வருமுன் காப்போம்!'ங்கற கொள்கையைக் கடைப்பிடிக்கறதுதான் அறிவுள்ள வாழ்க்கைக்கு அழகு! முழுமையான அறிவையும் அழகையும் அள்ளித் தர்றதுதான் யோகா!'' என அழகாக விளக்கம் தரும் ஆச்சார்ய கிருஷ்ணவர்மா,

''வாழ்க்கையில் யோகம் அடிக்குமா என்று ஏங்குவதை விட யோகா கற்கத் தொடங்கினால், வாழ்க்கையே ஒரு யோகம்தான் என்பது புரிய ஆரம்பிக்கும்'' என்கிறார்.

– **எம்.ஆர்.ஆர்**



'அஞ்சாதே' மூலம் டைரக்டர் மிஷ்கினுக்குக் கிடைத்த பாராட்டைவிட, அதில் நடித்த அஜ்மல் பெற்ற அங்கீகாரம் அதிகம்.

''ரொம்ப சந்தோஷமா இருக்கு, இதைக் கேட்கறதுக்கு. ஆனா, எல்லாப் புகழும் மிஷ்கினுக்குதான்'' என்கிறார் அஜ்மல்.

அஜ்மல், டாக்டர் வேலையை விட்டுவிட்டார்.

''மொட்டையா விட்டுட்டேன்னு சொல்லாதீங்க. பிராக்டீஸ் பண்றதில்ல, அவ்ளோதான். மத்தபடி, மருத்துவம்

# டாக்ஸி ஹீரோ!

''என் ஃபேமிலில எல்லாரும் டாக்டர், இன்ஜினீயர்னு பெரிய படிப்புப் படிச்சவங்க. நானும் அப்படித்தான் படிச்சேன். ஆனா என்னமோ தெரியல, சின்ன வயசுலேர்ந்தே படங்கள்னா எனக்கு அப்படியொரு காதல். அதுலயும் தமிழ்ப் படங்கள்தான் ரொம்பப் பிடிக்கும். சண்டை, ரொமான்ஸ், பாசம், பரிதவிப்புன்னு எல்லாம் கலந்த கலவையா ஜொலிக்கறதால, தமிழ்ப் படங்கள் மேல அலாதி நேசம். இதுக்குத் தூண்டுகோலா அமைஞ்சது என் நண்பன். அவங்கப்பா ஒரு தியேட்டர் வைச்சிருந்தார். அதுல தமிழ்ப் படங்கள்தான் அதிகம் திரையிடுவாங்க. என்னதான் நான் டாக்டருக்குப் படிச்சாலும், உள்ளுக்குள்ள சினிமா ஆசை, தீ மாதிரி கனன்றுகிட்டே இருந்துச்சு. எந்த ஒரு விஷயம் மேலயும் தீவிரமான ஈடுபாடும் ஆத்மார்த்தமான தேடலும் இருந்தா, அது நடந்தே தீரும். இதோ 'அஞ்சாதே' மூலம் உங்க மனசுல அழுத்தமா பதிஞ்சு போயிட்டேன்'' என்கிறார் அஜ்மல்.

'இரண்டு ஹீரோ சப்ஜெக்ட் செய்யத் தயக்கமாக இல்லையா?' என்றால், ''எதுக்குத் தயங்கணும்? மிஷ்கினோட பாத்திரப்படைப்பு எவ்ளோ பவர்ஃபுல்லானது பார்த்தீங்கல்ல! 'சத்யா' கேரக்டரைச் சுத்திதான் கதையே நடக்குது. நடிக்க ஸ்கோப்புள்ள கேரக்டரை எந்த டைரக்டர் தந்தாலும், மூணு ரோல்ல ஒருத்தனா நடிக்கவும் நான் தயங்க மாட்டேன்'' என்று சொல்லும்

தொடர்பா அப்டுடேட்டா இருக்கேன். நடிப்புக்கே நேரம் சரியா இருக்கறதாலதான் இந்நிலை. நடிச்சு, சம்பாதிச்சு பெரிய ஹாஸ்பிட்டல் கட்டி, அதுல முடிஞ்ச வரைக்கும் ஏழைகளுக்கு இலவசமா எல்



லாம் செய்யணும். இதை என் லட்சியம்னு சொல்லக் கூகது. கட மைன்னு சொல்லலாம்.''

இந்தியில் வெளியாகி ஹிட்டான 'டாக்ஸி நம்பர்' படத்தைத் தமிழில் தயாரிக்கிறது ஜி.வி. ஃபிலிம்ஸ் நிறுவனம். இந்தியில் நானா படேகர் ரோலைத் தமிழில் பசுபதி செய்ய, ஜான் ஆபிரகாம் கேரக்டரில் அஜ்மல் நடிக்கிறார்.

''அஞ்சாதே வெற்றிக்குப் பிறகு நிறைய படங்கள் தேடி வந்துச்சு. ரெண்டு படத்துக்கு மட்டும்தான் கால்ஷீட் கொடுத்திருக்கேன். எனக்குப் பிடித்த ஸ்க்ரிப்ட் மொதல்ல அவசியம். அதுக்காக, 'ஆக்ஷன் ஹீரோவா அரிவாள் தூக்கிட்டு அலைய இவன் ஆசைப்படறான்'னு நினைக்க வேணாம். கதையும் என் கதாபாத்திரமும் பார்வையாளனைக் கட்டிப் போடணும். கோபம், ஆத்திரம், சந்தோஷம், துக்கம்னு ஏதாவது ஓர் உணர்வை அவன்கிட்ட வரவழைக்கணும். அதைத்தான் நான் எதிர்பார்க்கிறேன். அந்த விதத்துல 'TN 07 4777' படத்துல என்னால அடுத்த பரிமாணத்தை எட்ட முடியும்னு நம்பறேன். அதே மாதிரி, பிரமிட் சாய்மீரா மூலம், அழகன் தமிழ்மணி சார் தயாரிக்கிற படத்திலும் தனி ஹீரோவா நடிக்கிறேன். இந்த ரெண்டு படங்களையும் நல்லா பண்ணணும். இப்ப இதுதான் என் டார்கெட்.

''மலையாளப் படங்களை விட, தமிழ்ப் படங்களைத்தான் நான் அதிகம் நேசிக்கிறேன். தமிழ்ப் படங்கள் இன்னைக்கு மலையாளப் படங்களுக்கு முன்னுதாரணமா திகழுது. யதார்த்தமா எடுக்கப்படறதால கேரளப் படங்களால ஒரு கட்டத்துக்கு மேல செலவு பண்ண முடியல. பட்ஜெட்டும் கம்மி. ஆனா, தமிழ் சினிமா கோடிகள்லதான் புரளுது. விளைவு, டெக்னிக்கலா எவ்ளோ முன்னாடி நிக்கறாங்க! இதெல்லாம் பார்க்கும் போது பிரமிப்பா இருக்கு. தமிழ்ல நான் செட்டிலாயிட்டாகூட எனக்குச் சந்தோஷம் தான்'' சிரிப்பும் பொறுப்புமாகச் சொல்கிறார் அஜ்மல்.




**- மதுமிதா**

## - 'அஞ்சாதே' அஜ்மல் பேட்டி

நான் வேலைக்காரன்தான். ஆனா, அடிமை இல்லை. மத்தவங்கெல்லாம் பத்து மணிக்கு வந்துட்டு அஞ்சு மணிக்குப் போகும்போது, நான் மட்டும் காலைல எட்டுலருந்து ராத்திரி பத்துவரைக்கும் இருக்கணும்னு வற்புறுத்துவார். பல சமயம் காரணமே இல்லாம காக்க வைச்சு அனுப்புவார். அதுக்காகக் கூடுதலாக ஒரு பைசாகூடக் கிடைக்காது. நான் தனி ஆள்னாலும் பரவாயில்லை. குடும்பம், குழந்தை இருக்கு. குழந்தைக்கு உடம்புக்கு முடியலைன்னு பணம் கேட்டால், அம்பது ரூபாய் கொடுத்துட்டு, அடிக்கடி நச்சரிக்காதேங்கறார். வேற இடம் போகவும் விடலை. எவ்வளவு நாள் பொறுத்துக்கறது. அதான்...'' - என்று வாசித்தான், கந்தசாமி.

''**கொ**லை நடந்த இடத்தில் புது நபர் யாரும் வந்ததற்கான தடயம் கிடைக்காத பட்சத்தில், கூடவே இருந்தவர்கள்ல நீதான் கொன்றிருக்க முடியும். அட்டெண்டர் கந்தசாமி, கார் டிரைவர் மற்றும் காவலாளி. இந்த மூணு




உன்
சின்னச் சின்ன
சிரிப்பொலிதான்
என்
சிறகுகள் என்று
நினைத்தேன்
பறக்கும் போதுதான்
தெரிந்தது
அது சிறகல்ல
சிலுவையென்று

- தஞ்சை சகா

பேர்ல ஒருத்தராய் இருக்க வாய்ப்புண்டுன்னு தோணிச்சு. மூணு பேரும் பல வருஷமா பொன்ராஜ்கிட்ட விசுவாசமா வேலை பார்த்தவங்க. ஏமாற்றத்துக்கு ஆளாகும்போது, அவங்களே முதலாளிக்கு எதிராய்த் திரும்ப வாய்ப்பு உண்டு. டைரக்டர் பூபதியும் அதை உறுதிப்படுத்தினார். கொலையைத் திரும்பத் திரும்ப நினைவூட்டுவதன் மூலம் சம்பந்தப்பட்டவர்களின் மன உறுதியைக் குலைத்து, உண்மையை வெளிக் கொண்டு வர முடியுமான்னு யோசிச்சேன். கொலையில் சம்பந்தப்பட்ட 'கத்தி'யை, பலரும் அடுத்தடுத்து சொல்றதுக்கு ஒரு வியூகம் அமைத்தேன். காவல்காரர்கிட்டயும், ஜவகர்

**படுதலம் சுகுமாரன்**

கிட்டயும் ரியாக்ஷன் இல்லை. ஆனால், கந்தசாமியால் மறைக்க முடியல. புவர்ஃபெலோ! ஒரு ஆவேசத்துல கொன்னுட்டு, ஆபத்துல மாட்டிக்கிட்டான்...'' - என்றார் விஷ்வா!

கமிஷனர், பாராட்டும்விதமாக விஷ்வாவின் தோளில் தட்டிக் கொடுத்தார்.

ஒரு வருடம் கழிந்தது.

'புள்ளிகள்... கோலங்கள்...' முன்பைவிட அதிகமான வரவேற்புடன், போய்க் கொண்டிருந்தது.

மறப்போம், மன்னிப்போம் என்ற மனோபாவத்தில், கோகிலாவை குணா வீட்டுக்கு அழைத்து வந்தான்.

அதே விதமாகத்தான், சுலேகா, பூபதிக்குக் கட்டி வைக்கப்பட்டாள்.



ஒரு பக்கத் தொடர் 27

# கோலங்கள்...

தன் கனவு மெய்யாகிவிட்டதே என்று வேதனையில் வாடியிருந்த பார்வதி, கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, கணவனின் கனவுகளை ஈடேற்ற, குடும்பப் பொறுப்புடன், அலுவலகப் பொறுப்புகளையும் ஏற்றுக்கொண்டாள்.

மைத்துனர்களின் உதவி, ஒத்துழைப்புடன், நிர்வாகத் தேரை நன்றாகவே செலுத்த ஆரம்பித்தாள், பார்வதி.

(முற்றும்)



''வயித்து வலி டாக்டர்!''

''ஹோட்டல்ல சாப்பிட்டீங்களா?''

''பார்சல் வாங்கிட்டுவந்து வீட்லதான் சாப்பிட்டேன்!''

- தமிழ்நாயகி

புத்தர் அன்றாட வாழ்வின் அவலங்களைப் பார்த்து அரண்மனை துறந்தார் என்பது அறிந்த செய்திதான். ஆனால், தமது நாட்டு நதி நீர் பிரச்னையால்தான் நாடு கடத்தப்பட்டார் என்கிற குறிப்பு அறியப்படாமல் உள்ளது. நமது யோகநூல், உடலில் சூட்சும சக்தியின் உருவங்களாக ஏழு சக்கரங்கள் தாமரை வடிவில் இருப்பதாகச் சொல்லும். திபெத் புத்த விஹார ஓவியங்களோ ஒன்பது சக்கரங்கள் ஆன்மிக வாசல்களாக அமைந்துள்ளன என்கின்றன. இப்படியாய் இன்னும் அறியப்படாதவற்றை அறிந்து கொள்ளும் தேடல், வாழ்வின் ருசியைக் கூட்டுகிறது. சலிப்பெனும் இருளைக் கழுவி, வாழ்வை அதிகாலை வெளிச்சமாக்குகிறது. இதன் வெளிப்பாடுதான் கலை வடிவங்கள். திபெத்திய புத்த ஓவியங்களைக் கருவாகக் கொண்டு 'போதிசத்துவா' என்ற தலைப்பிலான இந்தப் பிம்பங்கள் வாசகர்களின் பார்வைக்கு வாழ்க்கை அறையின் இன்னொரு ஜன்னல்தானே? – அமிர்தா

ஓவியங்கள் :
போதி செல்வம்







# உடையழகு... நடையழகு...




''இந்த வருஷம் முடியறதுக்குள்ள எங்கப்பாவுக்குக் காது குத்தி அழகு பாத்தேயாகணும். எங்கப்பா கோ-ஆப் ரேட்டே பண்ண மாட்டேங்கறாரு. 'காது குத்திண்டு நடிகர் சங்கத்துப் பக்கம் போகவே முடியாது'ன்னு அடம் பிடிக்கறாங்க...'' சொல்லி விட்டு பளீரெனச் சிரிக்கிறார், இந்த வித்யாசமான மகள்!

யாரந்த அப்பா? 'தகிடு' 'தகிடு' என்று தம் ஸ்பெஷல் நக்கலாலேயே எதிராளியைத் த்வம்சம் செய்யும் அலம்பல் மன்னன், சத்யராஜ்தான் அந்த அப்பா. இவருடைய செல்ல மகள் திவ்யா!

''என்னுடைய ஸ்டைல் ஐகான் எங்கப்பா - அம்மாதாங்க. அப்பா சினிமாவைத் தவிர, எங்கு போனாலும் விக் போடவே மாட்டார். அவருடைய லெவல் ஆஃப் கான் ஃபிடன்ஸ் என்னைப் பிரமிக்க வைக்குது. என் அம்மா காட்டன் புடைவைதான் கட்டுவாங்க. பட்டுப் புடைவையே அதிகம் கிடையாது. திருமணங்களுக்குக் கூட, சில்க் காட்டன்தான் கட்டு வாங்க. சூப்பர் நெட் புடைவை கள் அதிகமா வாங்குவாங்க.'' தன் அழகான பெற்றோரின் உடையழகைப் பற்றிச் சொல் கிறார் திவ்யா!

அது சரி, திவ்யாவின் ஸ்டைல் ஸ்டேட்மென்ட் என்ன?

''எனக்கு வெஸ்டர்ன் அவுட்ஃபிட் தான் பிடிக்கும். அதிகமா ஜீன்ஸ் தான் போடுவேன். எப்ப வாச்சும் சல்வார் கமீஸ்... மத்த படி புடைவையெல்லாம் நோநோ. எனக்கு டய மண்ட்லே பிடிக்காது(!!) ஃபேஷன் ஜூவல்லரிதான் பிடிக்கும். மேக்கப், ப்யூட்டி பார்லர் போவது இதெல் லாம் எனக்குப் பிடிக்காது. ஐப்ரோ பண்ண மட்டுமே பார்லர் போவேன். எனக்கு நல்ல லாங் ஹேர். லூஸா விட்டுப்பேன். வேறெந்த ஸ்டை

லும் கிடையாது. சிம்பிளாத்தான் இருப்பேன். டெய்லி ஜிம்மில் வொர்க் அவுட் பண்ணுவேன். நான்-வெஜ் சாப்பிட மாட்டேன். (ஜீவகாருண்யம்!) லெதர் பேக் யூஸ் பண்ண மாட்டேன். சில கொள்கைகள் வைச்சிருக்கேங்க...'' பளீரெனப் பேசும் திவ்யாவுக்கு, சிவப்பழகு க்ரீம் என்றால் படு எரிச்சலாம்! ''இந்த கலர் ஃபிக்ஸேஷன்ஸே பிடிக்கலைங்க. அதென்ன சிவப்பாயிருந்தாத்தான் அழகா? நந்திதா தாஸ், கொங்கனா சென், அர்ச்சனா... இவங்க எல்லோருமே எவ்வளவு அழகாயிருக்காங்க... அபிப்ராயங்கள் மாறணுங்க...'' அழகாக அங்கலாய்க்கிறார் திவ்யா!

சினிமாவில் திவ்யாவுக்குப் பிடித்த உடையழகர்/கி யாரென்று புலனாய்வு செய்ததில் தெரிய வந்தது என்னவென்றால், ''சூர்யா அண்ணா ட்ரெஸ் பண்ணிக்கற விதம் ரொம்ப பிடிக்கும். அவங்க மாரேஜ் அன்னிக்கு ஜோதிகா எவ்வளவு அழகா இருந்தாங்க. பிரிட்டியஸ்ட் ப்ரைட் அவங்கதான். பிரதர் சிபி இன்னும் கொஞ்சம் உடையில் எக்ஸ்பெரிமென்ட் பண்ணினா, நன்னாயிருக்கும்னு தோணறது. அனுஹாசன் ஃபன்டாஸ்டிக். அவங்க பேச ஆரம்பிச்சுட்டாங்கன்னா, என்ன ட்ரெஸ் போட்டுண்டிருக்காங்கன்னு யாரும் பாக்கறதில்ல. அவ்வளவு சுவாரஸ்யமா பேசறாங்க... நான் சித்ரா விஸ்வேஸ்வரன் கிட்டே பரத நாட்டியம் படிச்சிருக்கேன். அவங்க ட்ரெஸ்ஸும் பிடிக்கும். என் அம்மாவை அப்பா வெஸ்டர்ன் ட்ரெஸ் போடுன்னு சொல்வார். ஆனா, அம்மா புடைவைதான் கட்டுவாங்க. வெளியூருக்குப் போனா சல்வார் - குர்தீ போடுவாங்க'' என்று சொல்லும் திவ்யா, அவருடைய அம்மாவைப் பற்றிய ஒரு சீக்ரெட்டை நமக்கே நமக்காக அவுட் பண்ணியிருக்கிறார். ''எங்கம்மாவுக்குச் சமைக்கவே தெரியாதுங்க. மாகி பண்ணுவாங்க...'' என்று அடக்க முடியாமல் சிரிக்கிறார்.

எம்.ஃபில் பண்ணிக் கொண்டிருக்கும் திவ்யா சினிமா, மாடல் உலகில் கால் பதிக்காமல், வித்யாசமான துறையைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். ''ஏதாவது என்.ஜி.ஓ.வுல சேர்ந்து, சமூகத்துக்காக வொர்க் பண்ணணுங்க. அதுக்குத்தான் படிச்சிட்டிருக்கேன்'' என்கிறார் உறுதியாக!

பெண்களுக்கு உடை விஷயத்தில் சுதந்திரம் கொடுக்க வேண்டும் என, கொடி பிடிக்கிறார் திவ்யா. ''அவங்க இஷ்டத்துக்கு ட்ரெஸ் செய்யற உரிமை பெண்ணுக்கு வேணுங்க. மேலும், ஒரு பெண்ணுக்கு அடக்கம்தான் அழகுன்னு பேசறவங்களை எனக்குப் பிடிக்கவே பிடிக்காது. தைரியம், தன்னம்பிக்கை தாங்க பெண்ணுக்கு அழகு. காவல் துறையில என்.ஜி.ஓ.வுல இருக்கற தைரியமான பெண்கள் எத்தனை அழகு தெரியுமா? 'இப்படிக்கு ரோஸ்' திருநங்கை எவ்வளவு தைரிய அழகியாக இருக்கிறார்...'' சூடாகத் தன் கருத்தை முன் வைக்கிறார் திவ்யா.

அப்பா அப்பா என உருகும் இந்தச் செல்ல மகள் திவ்யாவின் மொபைல் ரிங்டோனே 'என்னம்மா கண்ணு சௌக்யமா'தான்!

குட் கேர்ள் திவ்யா... நீங்ககூட ஒரு தைரிய அழகிதான்!

– லதா சேகர்

# ஸ்டேட்மென்ட்



“என்னை 'தாத்தா' என்றே அழைக்கலாம். நான் செயல்படும் விதத்தையும், என் சுறுசுறுப்பையும் பார்த்து அந்தக் குழந்தைகள் என்னை 'திருப்புகழ் மாமா!' என்று அழைத்து வருகின்றனர். திருப்புகழைப் பாடப் பாட வாய் மணப்பது போல, 'திருப்புகழ் மாமா!' என்று என்னை அழைக்கும்போது என் மனம் நிறைந்து விடுகிறது!'' எனக் கூறுகிறார் கோவை, வடவள்ளி பகுதியில் வசித்து வரும் ஏழுபத்தேழு வயதான ஹரிஹரன்.

'சாதனா சதன்' எனப்படும் சத்சங்க மையத்தினை, வடவள்ளி பகுதியில் தம்முடைய சொந்தப் பணத்தில் கட்டியுள்ளார். அதனுள்ளே நம் பாதங்கள் பதிவதே ஓர் ஆனந்த அனுபவம். வண்ண வண்ண பூச்செடிகள். நிழல் தரும் மரங்கள். இவற்றைக் கடந்து சென்றால், உள்ளே 'வந்து உட்காருங்கள்' என்று அனிச்சையாகவே நம்மை அமர வைத்துவிடும் தியான மண்டபம்.

அக்குபங்சர் சிகிச்சை கேள்விப்பட்டிருக்கிறோம். அக்கு ப்ரஷர் நடைபாதை? 'சாதனா சதன்'



உள்ளே அமைக்கப்பட்டுள்ளது அந்த நடைபாதை. மேட்டுப் பாளையம், பவானி ஆற்றிலிருந்து இதற்கென கூழாங் கற்கள் பொறுக்கியெடுத்து வந்திருக்கின்றனர். அந்தக் கூழாங்கற்களை அக்குபிரஷர் முறைப்படி தரையில் பதித்து உருவாக்கப்பட்டுள்ளது நடைபாதை.

**கூழாங் கற்களை அக்குபிரஷர் முறைப்படி தரையில் பதித்து உருவாக்கப் பட்டுள்ளது நடைபாதை.**

“இந்தப் பகுதி பெண்களில் பலரும், தினசரி காலை மற்றும் மாலை நேரங்களில் இந்த நடைபாதையில் நடந்து வருகிறோம். இதனால் உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரைக்கும் இரத்த ஓட்டம் சீராக்கப்படுகிறது. முக்கியமான கண்டிஷன், அந்தப் பாதையில் வெறும் பாதங்களுடன்

நடக்க வேண்டும். சாதாரணமாகத் தரையில் ஒரு மணி நேரம் நடப்பதற்கு, இதில் பதினைந்து நிமிடங்கள் நடந்தாலே போதும்!'' எனக் கூறுகின்றனர் வாக்கிங் மங்கையர்.

சாதனா சதனில் இன்னும் வேறென்ன விசேஷம்? ஹோட்டலில் வழங்கப்படும் மெனுவைப் போல, இங்கு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு தலைப்புகளில் அறிஞர்களைக் கொண்டு பக்திச் சொற்பொழிவு நடத்தப்படுகிறது. திங்கட்கிழமை திருப்



# திருப்புகழ் மாமா!

புகழ் இசை வகுப்பு. செவ்வாய், பகவத் கீதை உரை. புதன் காலையில் நாராயணீயம், மாலையில் தேவாரம் இசை வகுப்பு. வியாழன் காலை சுந்தர காண்டம் சொற்பொழிவு, மாலை உபநிஷத் விளக்கவுரை. இப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பக்தி சஞ்சாரம்!

''இவை ஒவ்வொன்றும் தினசரி முப்பது அன்பர்கள் பங்கேற்கும் நிகழ்ச்சிகள். அனுமதி இலவசம். அது மட்டுமல்ல, கோவையின் பல பகுதிகளிலிருந்தும் ஆர்வமுடன் வந்து செல்லும் அன்பர்களை, எங்கள் சொந்தக் காரில் இங்கு அழைத்து வருகிறோம். அதுபோல நிகழ்ச்சிகள் முடிந்ததும், அன்பர்கள் அனைவரையும் எங்களது காரிலேயே அவரவர் பகுதிகளில் கொண்டு போய் விட்டுவிடுகிறோம். இதற்கென நாங்கள் யாரிடமும் கட்டணமோ, நன்கொடையோ பெறுவதில்லை!'' எனக் கூறுகிறார் ஹரிஹரன் மனைவி சுந்தரி.

''கடந்த நான்கு ஆண்டுகளாக ஒவ்வொரு வருடமும், தமிழிசை விழாவைச் சிறப்பாக நடத்தி வருகிறோம். இந்த விழாவில் கோவை மற்றும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளைச் சார்ந்த தமிழிசைக் கலைஞர்கள், வாய்ப்பாட்டுக் கலைஞர்கள், வளர்ந்து வரும் கலைஞர்கள் ஆகியோருக்கு வாய்ப்புகள் தரப்பட்டு வருகின்றன. சாதனா சதனில் ஞாயிற்றுக்கிழமை காலைப் பொழுது, குழந்தைகளுக்கென்றே ஒதுக்கப்பட்டுள்ளது. வளரும் சிறுவர் சிறுமியர் மனங்களில் ஆன்மிகத்தை ஆழமாகப் பதிய வைத்தால், எதிர்காலச் சமூகம் சிறந்து விளங்கும் என்பது எனது நம்பிக்கை. நாற்பதாண்டு காலமாக புதுதில்லியில் மத்திய அரசுப் பணிகளில் இருந்து வந்துள்ள எனக்கு, கோவை வடவள்ளி 'சாதனா சதன்' வாழ்க்கையே முழு ஆத்ம திருப்தியைத் தந்து வருகிறது!'' என்று பெருமிதப்படுகிறார் ஹரிஹரன்.

செய்தியும், சித்திரங்களும்: **ஸ்ரீரங்கம் திருநாவு**

எலும்பு முறிவு எப்படி ஏற்படும்? 'மிக உயரத்திலிருந்து விழுந்தால்' என்றோ, 'பெரும் விபத்துகளினால்' என்றோதான் நாம் பதில் கூறுவோம்.

பேருந்தில் பயணம் செய்யும்போது, கரடுமுரடான சாலையினால் உடம்பு தூக்கிப் போடும்போதுகூட, எலும்பு முறிவு ஏற்படலாம் - அந்த எலும்பு மிக மிருதுவானதாக இருந்துவிட்டால். அதாவது, எலும்புகளில் போதிய அடர்த்தி இல்லாவிட்டால்.

இந்த நிலையை ஆஸ்டியோபொராசிஸ் (எலும்புத் தேய்மானம்) என்பார்கள்.

முதலில் ஆஸ்டியோபொராசிஸ் குறித்தும் சிகிச்சை முறை குறித்தும் சில அடிப்படை உண்மைகளை அறிந்துகொள்ள,

# வருடத்துக்கு



எலும்பு நல அறுவை சிகிச்சை நிபுணர் எஸ்.ரவீந்திரனை அணுகியபோது...

"போதிய கால்ஷியம் கிடைக்காததனால், எலும்புகள் அடர்த்தி குறைந்து மிருதுவாகின்றன. உடலுக்குள் கால்ஷியத்தைச் செலுத்தினால் மட்டும் போதாது. அது சரியான வடிவத்தில் கிடைத்தால்தான் எலும்பு அதை உறிஞ்சிக்கொள்ளும். கால்ஷியம் மட்டுமல்ல, வேறு சில கனிமங்கள் மற்றும் ஹார்மோன்கள் ஆகியவையும் எலும்பின் ஆரோக்கியத்துக்குத் தேவை. இவை குறையும்போது, எலும்பின் உறுதித்தன்மை குறைந்துவிடுகிறது.

இதற்கு வயது அதிகமாவது ஒரு முக்கிய காரணம். நடுத்தர வயதைக் கடந்தவர்களுக்குத்தான் இந்தப் பாதிப்பு பெரும்பாலும் வருகிறது. தவிர, பெண்களை அதிக அளவில் பாதிக்கிறது. நடுத்தர வயதைக் கடக்கும்போது அவர்களுக்கு உண்டாகும் மாதவிலக்கு நிற்கும் கட்டம்- மெனோபாஸ். அப்போது அவர்கள் உடலில் அதுவரை சுரந்து வந்த ஈஸ்ட்ரொஜென் என்ற ஹார்மோன் சுரப்பது நின்றுவிடுகிறது. அதுவரை மாதவிலக்குக் கட்டத்தில் சுரந்த ஈஸ்ட்ரொஜென், மறைமுகமாக எலும்பு உருவாக்கத்தில் பயன்படுகிறது. மாதவிலக்கு நின்றவுடன், எலும்பின் அடர்த்தி திடீரெனக் குறைந்து, மிருதுவாகிறது. எனவே, அவர்களின் எலும்பைக் கொஞ்சம் அழுத்திப் பிடித்தாலேகூட, கடும்வலி ஏற்படலாம். இலேசாக விழுந்தாலேகூட எலும்புமுறிவு உண்டாகலாம்.

இந்த நிலையில் தானாகச் சுரக்காத ஈஸ்ட்ரொஜென் ஹார்மோனை, செயற்கையாகத் தயாரித்து, அவர்களுக்கு அளிக்கும் சிகிச்சை மேற்கொள்ளப்பட்டது. ஆனால், இதனால் புற்றுநோய்க்கான வாய்ப்பு அதிகரித்ததாலும், அதிக எடை போடுதலாலும் இந்தச் சிகிச்சையை மருத்துவர்கள் இப்போது பரிந்துரைப்பதில்லை.

எலும்பை உறுதியாக்க முன்பெல்லாம் கால்ஷியம் மாத்திரைகளும் இயற்கை உணவுகளான கால்ஷியம் நிறைந்த

* டாக்டர் எஸ்.ரவீந்திரன்





இதனால் எலும்பு முறிவு ஏற்படும் வாய்ப்பு குறைகிறது.

மிகச் சமீபத்தில்தான் முன்னேறிய நாடுகளில், இன்ஜெக்ஷன் மூலம் செலுத்தக்கூடிய மருந்து அறிமுகமாகியிருக்கிற அதே சமயத்தில், இந்தியாவிலும் அறிமுகமாகியிருக்கிறது என்பது கூடுதல் விசேஷம். கடந்த நான்கு மாதங்களுக்கு முன் அறிமுகமாகியிருக்கும் இந்தச் சிகிச்சை முறை முதியவர்களுக்கு வரப்பிரசாதம்.

எலும்பிலுள்ள கனிமப் பொருட்களின் அடர்த்தியைக் கணிக்கும் கருவி (Bone Mineral Density Meter) மூலம் ஆஸ்டியோபொராசிஸை அதன் தொடக்க கட்டத்திலேயே கணிக்க முடியும். ஐம்பது வயதுக்குப் பிறகு ஒவ்வொருவருமே இந்தச் சோதனையைச் செய்துகொள்ள வேண்டும். பெண்களென்றால் மாதவிலக்கு நின்றவுடன் செய்துகொள்ள வேண்டும்'' என்றார்.

# ஒரே ஒரு ஊசி!



பால், தயிர் போன்ற பால்பொருள்கள், கீரை, இறைச்சி போன்றவை சிபாரிசு செய்யப்பட்டன. குறிப்பாக, தயிரில் எக்கச்சக்க கால்ஷியம் உண்டு. 500 கிராம் தயிரில் 500 மில்லிகிராம் கால்ஷியம் உண்டு.

ஆஸ்டியோ செல்கள் என்பவை எலும்பை உருவாக்கும் செல்கள். இவை பல்கிப் பெருகி ஒருவித வலைபோன்ற அமைப்பை உருவாக்குகின்றன. அவற்றை அடர்த்தியாக்கும் பொருள்தான் கால்ஷியம். இது குறையாமல் இருக்க பிஸ்ஃபாஸ்ஃபொனேட்ஸ் என்ற வேதிப்பொருள் உதவுகின்றது.

இதை மாத்திரை வடிவில் தினமும் உட்கொள்ளும் சிகிச்சை முறை, ஐந்திலிருந்து பத்து வருடங்களாக இருந்து வருகிறது. இதில் தொந்தரவு மிக்க பக்கவிளைவுகள் உண்டு. ஆனால், இப்போது ஊசி மருந்து வடிவில் இதே வேதிப் பொருளைச் செலுத்த முடிகிறது. வருடத்துக்கு ஒரு முறை இந்த ஊசி மருந்தைச் செலுத்திக் கொண்டால் போதும். நல்ல பலன் ஏற்படுகிறது. பக்க விளைவுகள் தொந்தரவு இராது. எலும்பின் அடர்த்தி சுமார் 30லிருந்து 40 சதவிகிதம் அதிகமாகிறது.

ஒருமுறை செலுத்திக்கொள்ள வேண்டிய இந்த ஊசிமருந்தின் விலைதான் என்ன? என்றோம். ''அது அதிகம்தான். சுமார் பதினாறாயிரம் ரூபாய்! ஒரே நிறுவனம் இதைத் தயாரிக்கிறது என்பதாலும் அதிக விலையாக இருக்கலாம். ஆனால், அந்த நிறுவனத்தினர், 'ஒரு வருடத்துக்குத் தினமும் மாத்திரை வாங்க தேவைப்படும் விலையோடு ஒப்பிட்டால், ஊசிமருந்து சிகிச்சைக்கான செலவு குறைவானதாகத்தான் இருக்கும்' என்கிறார்கள்'' என்று விளக்கினார் டாக்டர் ரவீந்திரன். வருடம் முழுதும் மாத்திரைகளில் - அதுவும் பக்க விளைவுகளுடன் - காலம் தள்ளாமல், ஒரே ஒரு ஊசி சுகம்தானே? ○




—மருதன்

# எய்ட்ஸ்க்கு

நெல்சன் மண்டேலாவுக்கு உலகம் முழுவதிலும் இருந்து பல்வேறு வாழ்த்துச் செய்திகளும் பரிசுப் பொருட்களும் வந்து குவிந்திருந்தாலும், அமெரிக்கா அளித்த பரிசுக்கு நிகரான இன்னொன்றைச் சொல்ல முடியாது. ஒரு கணம் அசந்து நின்றுவிட்டார். என்ன செய்வது என்று அவருக்குத் தெரியவில்லை. பார்சலில் வந்து சேர்ந்திருந்தது அந்த வாழ்த்து. கூடவே டைப் செய்து அனுப்பப்பட்ட ஒரு அரசாங்க ஆணை. அடுத்து என்ன செய்வது என்று தெரியாமல் சில நிமிடங்கள் விழித்திருக்கிறார் மண்டேலா.

தற்செயலாக காண்டலீசா ரைஸின் கண்களில் ஒரு ஃபைல் சிக்கியிருக்கிறது. ஆப்பிரிக்க தேசிய காங்கிரஸ் தொடர்பான ஆவணம் அது. நெல்சன் மண்டேலாவின் பெயர் தீவிரவாதிகளின் பட்டியலில் இடம் பெற்றிருந்தது; அதுவும் முதல் வரிசையில்! கிட்டத்தட்ட ஒசாமா பின்லேடனுக்குக் கொடுக்கப்பட்ட அதே அங்கீகாரம்.

நெல்சன் மண்டேலாவின் 90வது பிறந்த நாள் இன்னும் சில தினங்களில் (ஜூன் 27) கடந்து செல்ல இருந்தது. உலகமே அவரைத் தலையில் வைத்துக்கொண்டாடும் ஒரு தருணத்தில், அமெரிக்க ஆவணங்கள் மட்டும் அவரைத் தீவிரவாதியாகச் சித்திரித்தால் நன்றாகவா இருக்கும்? 'அந்தக் காலத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் இது. இன்னமும் மாற்றாமல் வைத்திருப்பது அவமானகரமாக உள்ளது. பெரும் உறுத்தலாகவும் உள்ளது. அவர் பிறந்த நாள் தேதி வருவதற்குள் இதை மாற்றி விட முயற்சி செய்கிறோம்' என அறிவித்தார் ரைஸ்.

தென் ஆப்பிரிக்காவில் நிலவிய நிறவெறிக்கு எதிராக, ஒரு போராளியாக நெல்சன் மண்டேலா



களத்தில் குதித்த நேரம் அது. அமைதி ஊர்வலம், கருணை மனு எல்லாம் உதவாது, அடிக்கு அடி, உதைக்கு உதை என்று இறங்கினால் மட்டுமே போராட்டம் வெற்றி பெறும் என்னும் மனநிலையில் மண்டேலா அப்போது இருந்தார்.

'மண்டேலா, ஒரு தீவிரவாதி' என ஒரு பிம்பத்தை தென்னாப்பிரிக்க அரசாங்கம் உருவாக்கி வைத்தது. 1960ல் ஆப்பிரிக்க தேசிய காங்கிரஸ் தடை செய்யப்பட்டது. முதன்மை தீவிரவாதியாக நெல்சன் மண்டேலா அறிவிக்கப்பட்டார்; சிறைபிடிக்கப்பட்டார்.

இதையடுத்து, தேசிய ஆப்பிரிக்க காங்கிரஸ் ஒரு தீவிரவாத இயக்கம் என்று அமெரிக்கா அறிவித்தது. மிகச் சீக்கிரத்தில் சாத்வீகப் போராட்டமுறைக்கு மண்டேலா திரும்பிவிட்டாலும், அவரைப் பற்றிய பிம்பத்தை மாற்றிக்கொள்ள தென் ஆப்பிரிக்க அரசும் அமெரிக்க அரசும் தயாராக இல்லை. 27 ஆண்டு சிறை வாசத்துக்குப் பிறகு மண்டேலா விடுதலை செய்யப்பட்டார்!

சமீபத்தில் அமெரிக்க அரசின் அவை கூட்டப்பட்டது. நிலைமையை விளக்கினார்கள். 'இப்போது நமக்கு அதிக நேரம் இல்லை. உடனடியாக அனைவரும் ஒப்புதல் கொடுங்கள். சட்டத்திருத்தத்துக்கான உத்தரவைத் தயார் செய்துவிடுவோம். அதிபருக்கு அனுப்பி, ஒப்புதல் வாங்கிவிடுவோம். உடனே, உடனே ஒரு காப்பி எடுத்து மண்டேலாவுக்கு அனுப்பிவிடலாம்; பிறந்த நாள் பரிசாக!'

'மிஸ்டர் மண்டேலா, இனி நீங்கள் தீவிரவாதி கிடையாது. ஆப்பிரிக்க தேசிய காங்கிரஸ் மீதான தடையை அகற்றிவிட்டோம். இந்நூற்றாண்டின் முக்கிய அகிம்சைப் போராட்டத் தலைவராக உங்களை அங்கீகரிக்கிறோம். இப்படிக்கு அமெரிக்கா.'

'ஓ சரி, மிக்க நன்றி' என்று அந்த உத்தரவை வாங்கி உள்ளே வைத்துக்கொண்டு விட்டார் மண்டேலா.

# எதிராக... 46664

46664. சிறையில் இருந்தபோது மண்டேலாவின் அடையாள எண். ஒடுக்கு முறையின் குறியீடாக அன்று கருதப்பட்ட 46664, இந்த பிறந்தநாள் விழாவின்போது உருமாறிவிட்டது. விழாவில் கலந்துகொள்வதற்கு மொத்தம் 46664 நுழைவுச் சீட்டுகள் அச்சடிக்கப்பட்டன. கிடைத்த வருமானத்தை எய்ட்ஸ் விழிப்புணர்வுப் பிரசாரத்துக்கு அளித்துவிட்டார் மண்டேலா. முன்னர் நிறவெறிக்கு எதிராகப் போராடிக்கொண்டிருந்த மண்டேலா, இப்போது எய்ட்ஸ் விழிப்புணர்வு பிரசாரத்தில் முழுமையாக இறங்கியுள்ளார். இன்று தென் ஆப்பிரிக்காவை உலுக்கியெடுத்துக்கொண்டிருக்கும் முக்கிய பிரச்னை எய்ட்ஸ். 46664, இப்போது எய்ட்ஸ் விழிப்புணர்வு பிரசாரத்தின் குறியீடாக மாறியிருக்கிறது! ○

# கடல் தாண்டி வந்த காதலி!

**ஷோபா சந்திரசேகர்**

**வி**ஜய்க்கு தமிழ்நாடு முழுதும் 50,000க்கும் மேல ரசிகர் மன்றங்கள் இருக்கு. நிறைய ரசிகர்கள், 'நமக்குன்னு ஒரு கொடி வேணும்'னு பல தடவை கேட்டதுக்கு அப்புறம்தான் கொடியை அறிமுகப்படுத்தியிருக்கான் விஜய். இந்தக் கொடி பத்திப் பேச்சு வந்தப்போ, நிறைய பேர் என் கிட்டயே, 'விஜய் அரசியலுக்கு வரப் போறாரா?'ன்னு கேட்டாங்க. விஜய்க்கு அப்படியெல்லாம் எந்த எண்ணமும் இல்லை. நல்லா செயல்பட்டுக்கிட்டு இருக்கற நற்பணி மன்றத்துக்கு, 'உழைத்திடு! உயர்ந்திடு! உன்னால் முடியும்'னு எல்லாருக்கும் நம்பிக்கை தர்ற மாதிரியான வாசகத்தோடு தனி அடையாளமா ஒரு கொடி இருக்கறதுல தப்பில்லைதானே?

**அ**ப்போ, விஜய்க்குக் கல்யாணம் பண்ணணும்னு நானும் அவனோட அப்பாவும் யோசிக்கக்கூடப் பாக்கலை. ஆனா, அவனைப் பாக்கறதுக்காகப் பொண்ணே லண்டன்லருந்து கிளம்பி வந்ததுதான் ஆச்சரியம்.

அந்தப் பொண்ணு பேரு சங்கீதா; அவங்க அக்கா பேரு பிரதீபா. ரெண்டு பேரையும் நாங்க சுருக்கமா கீதா, தீபான்னுதான் கூப்பிடுவோம். கீதாவோட அப்பா பேரு சொர்ணலிங்கம்; அம்மா, நிர்மலா. யாழ்ப்பாணம்தான் அவங்களோட சொந்த மண்ணு. கீதாவுக்கு நாலு வயசு நடந்துக்கிட்டு இருக்கறப்போ, சிலோன்லருந்து குடும்பத்தோட லண்டனுக்கு வந்து செட்டிலாயிட்டாங்க.

கீதா, தீபா ரெண்டுபேருமே கத்துக்கிட்ட வீணை, பரதநாட்டியக் கலைகளைக் கொஞ்சம் இம்ப்ரூவ் பண்ணிக்கலாமேன்னு, சென்னைக்கு வந்து அவங்களோட உறவினர் வீட்ல தங்கியிருந்தாங்க.

ஒரு நாள் தீபாவும் கீதாவும் விஜய்யோட அட்ரஸை எப்படியோ தேடிப் பிடிச்சு வந்துட்டாங்க.

அப்போ நாங்க சாலிகிராமத்துல இருந்தோம். இந்தப் பொண்ணுங்க ரெண்டு பேரும் எங்க வீட்டுக்கு வந்தப்போ, எங்களோட புரொடக்ஷன் மேனேஜர் ஜெயபிரகாஷ் வாசல் கேட்டுக்கிட்ட நின்னுக்கிட்டு இருந்திருக்கார். அவர்கிட்டப் போய் கீதா, 'நாங்க லண்டன்லருந்து வர்றோம். விஜய்யைப் பார்க்கணும்'னு சொல்லியிருக்கு.

அதுக்கு ஜெயப்பிரகாஷ், 'அம்மாவும் சாரும்தான் இப்போ வீட்ல இருக்காங்க. விஜய் ஷூட்டிங்குக்காக



ஃபிலிம் சிட்டி போயிருக்கார்'னு சொல்லியிருக்கார்.

அப்படியும் விடாம கீதா, 'ஃபிலிம் சிட்டி போனா விஜய்யைப் பாக்க முடியுமா?'ன்னு கேட்டிருக்கு. இதுமாதிரி விஜய்யைத் தேடி வர்ற எத்தனையோ ரசிகர்களை அவர் தினமும் பார்க்கறவர் தானே! அதனால அவரும், 'தாராளமாப் பாக்கலாம்மா'ன்னு சொல்லியிருக்கார். உடனே அவங்க ஃபிலிம் சிட்டிக்குப் போயிருக்காங்க.

அப்போ 'காலமெல்லாம் காத்திருப்பேன்'னு ஒரு படத்துல விஜய் நடிச்சுக்கிட்டு இருந்தான். ஆர்.சுந்தர்ராஜன் சார் அந்தப் படத்தை டைரக்ட் பண்ணிக்கிட்டு இருந்தார். அந்தப் படத்தோட ஷூட்டிங்தான் ஃபிலிம் சிட்டியில நடந்துக்கிட்டு இருந்தது.

ஷூட்டிங் பிரேக்ல யாரோ விஜய்கிட்ட 'உங்களைப் பாக்கறதுக்கு லண்டன்லருந்து வந்திருக்காங்க'ன்னு சொன்னதும், அவங்களை வரச்சொல்லியிருக்கான். ரெண்டு பேரையும் பாத்துப் பேசியிருக்கான். இவ்வளவு சிம்பிளா ஒரு நடிகர் இருப்பாருன்னு தீபா, கீதா ரெண்டு பேருமே எதிர்பார்க்கலை.

ஆனா, விஜய் ரொம்ப எளிமையா அவங்ககிட்ட பேசினதைப் பாத்ததும் அசந்து போயிட்டாங்க. 'நாங்க உங்க அம்மாவையும் அப்பாவையும் பாக்கணும்'ன்னு சொல்லியிருக்காங்க.

'அதுக்கென்ன! தாராளமாப் போய்ப் பாருங்க. ரெண்டு பேரும் வீட்லதான் இருக்காங்க. நல்லாப் பேசுவாங்க'ன்னு சொல்லியிருக்கான் விஜய்.

அடுத்த நாளே அவங்க எங்க வீட்டுக்கு வந்துட்டாங்க. என்னையும் விஜய்யோட அப்பாவையும் பார்த்து ரொம்ப நேரம் பேசிக்கிட்டு இருந்தாங்க. அவங்க குடும்பத்தைப் பற்றியும் பேசினாங்க. எங்களுக்கும் அவங்களை ரொம்பப் பிடிச்சிருந்தது.



## என்ன பரிசு?

- சரியான விடைகளுடன் வரும் முதல் 10 கூப்பன்களுக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட்...
- குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ்...

நல்ல அறிவான, திறமையான பொண்ணுங்கன்னு நினைச்சுக்கிட்டோம். ஆனா, அப்போ கூட விஜய்யோட கல்யாணத்தைப் பத்தி நாங்க யோசிக்கலை. அவங்க வீட்லயும் அந்த யோசனை இல்லை.

திரும்பவும் 1997ல் சென்னைக்கு வந்தாங்க. அந்த மூணு மாசத்துல, ரெண்டு பொண்ணுங்களும் அடிக்கடி எங்க வீட்டுக்கு வருவாங்க. எங்களைப் பாத்துப் பேசுவாங்க.

ஒரு நாள் அவங்க ரெண்டுபேரும் சாதாரணமா எப்பவும் போலத்தான் பேசிக்கிட்டு இருந்தாங்க. என் கணவர், சீதாகிட்ட, ''நீ விஜய்யைப் பத்தி என்ன நினைக்கிறே? உனக்கு விஜய்யைப் பிடிச்சிருக்கா? அவனைக் கல்யாணம் பண்ணிக்க உனக்குச் சம்மதமா?''ன்னு நேரடியா விஷயத்துக்கு வந்துட்டார்.

சீதாவுக்கு என்ன பதில் சொல்றதுன்னே தெரியலை. 'டக்'குன்னு இப்படிக் கேட்டவுடனே திகைச்சுப் போயிடுச்சு. ரொம்ப நேரம் யோசிச்சுட்டு, தயங்கித் தயங்கி பதில் சொல்லிச்சு.

''நாங்க ரொம்பவும் ஆர்த்தடாக்ஸான இந்து ஃபேமிலியைச் சேர்ந்தவங்க. ஃபிலிம் இண்டஸ்ட்ரியைச் சேர்ந்த ஒருத்தரைக் கல்யாணம் செஞ்சுக்க எங்க அம்மாவும் அப்பாவும் ஒத்துப்பாங்களான்னு தெரியலை''ன்னு சொல்லிச்சு. அன்னிக்குக் கிளம்பிப் போனவங்க, அவங்க அம்மா, அப்பாகிட்ட என் கணவர் இப்படிக் கேட்டதைச் சொல்லியிருக்காங்க.

பொதுவாவே, பெண்ணைப் பெத்த எல்லாருக்கும் ஒரு பயம் இப்பவும் இருக்கத்தான் செய்யுது. சினிமா உலகம் ஒரு மாய உலகம்; எந்த நேரத்துல என்ன நடக்கும்னு யாராலயும் சொல்ல முடியாது; ஒரு நடிகர், கொஞ்ச நாளைக்கு ஒரு பெண்ணோட குடும்பம் நடத்திட்டு டைவர்ஸ் பண்றதுங்கறது இங்க ரொம்ப சகஜம். சீதாவோட அம்மாவும் அப்பாவும் சினிமாத் துறைக்குச் சம்பந்தமே இல்லாதவங்க. அவங்களுக்கு என்ன பதில் சொல்றதுன்னு தெரியலை. ஆனா, சீதாவுக்கு இதுல விருப்பம் இருந்திருக்கும் போல.

ரெண்டு பொண்ணுங்களும் மாறி



# தொடர் சங்கிலிப் போட்டி கூப்பன்

கட் & கீப்

## விஜய் வின்னர்ஸ் - 10

மாறி எங்களைப் பத்தி எடுத்துச் சொல்லியிருக்காங்க ''நீங்க நினைக்கற மாதிரி இல்ல. ஃபிலிம் இண்டஸ்ட்ரியிலயே சந்திரசேகர் அங்கிளும் ஷோபா ஆன்ட்டியும் ரொம்ப வித்தியாசமானவங்க. ரொம்ப எளிமையானவங்க. இதுல பயப்படறதுக்கு ஒண்ணுமே இல்லை'ன்னு சொல்லிச் சொல்லியே பாறை மாதிரி இருந்த அவங்க மனசைக் கரைச்சிருக்காங்க.

ஒரு வழியா சிதாவோட அப்பா இறங்கி வந்தார். சிதாவோட ஜாதகத்தை எங்களுக்கு அனுப்பினார். நாங்க விஜய்யோட ஜாதகத்தை அவங்களுக்கு அனுப்பினோம்.

(தொடரும்)

*எழுத்து வடிவம் :* **பாலு சத்யா**

**ஹ**லோ வாசகர்களே!

**ஷோபா சந்திரசேகர் எழுதற 'என் செல்ல தளபதி' தொடர் அசத்தலா இருக்குதானே? நீங்களும் சும்மா அசத்தறீங்க இல்ல. போன வாரப் போட்டிக்கு மளமளன்னு என்ட்ரீஸ் குவியுது!**

- விஜய் வின்னர்ஸ் - 6 தொடர் சங்கிலிப் போட்டிக்கான முடிவும், இந்த வார கூப்பனும் பக்கம் 78ல் உள்ளன.
- பதிமூணு வாரமும் அதிரடிப் போட்டி தொடரப் போகுது. ஒவ்வொரு வாரமும் பரிசு! பதிமூன்றாவது வாரம் பம்பர் போட்டி, வியப்பான மெகா பரிசுகள்!
- நீங்க செய்ய வேண்டியது ரொம்ப சிம்பிள்! ஒவ்வொரு வாரமும் ஐந்து கேள்விகள் கேட்போம். அதுல ஒண்ணு தொடரிலிருந்து வரும். சரியான விடைகளை 'டிக்' அடிச்சு கூப்பனையும் நிரப்பி, அந்தப் பக்கத்தைக் கத்தரிச்சு அனுப்பணும்.
- ஒருவரே எத்தனை கூப்பன் வேணும்னாலும் அனுப்பலாம். ஆனா ஜெராக்ஸ் கூடாது. எவ்வளவு வேகமா அனுப்பறீங்களோ அந்தளவுக்குப் பரிசு பெற சான்ஸ் இருக்கு!
- வெய்ட்! பதிமூன்றாவது வார பம்பர் போட்டியில நீங்க கலந்துக்கணும்னா 'விஜய்' ஸ்டில் போட்ட 'தொடர் சங்கிலி கூப்பனை' பத்திரமா சேகரிக்கணும். (இந்த வாரம்-77ஆம் பக்கம் இருக்கு)
- பதிமூன்றாவது வார போட்டியோடு தொடர் சங்கிலி கூப்பன்கள் அனைத்தையும் இணைச்சு அனுப்பணும். ஒரு கூப்பனை 'மிஸ்' பண்ணினாலும், நீங்க அந்த வியப்பான பரிசுகளை 'மிஸ்' பண்ணிடுவீங்க.
- இந்த பதிமூன்று வாரத்தில் உங்களுக்கு ஒரு இதழ் கிடைக்காமப் போனாலும், உடனே எங்களுக்கு ஃபோன் பண்ணுங்க. உங்க நகரத்து ஏஜென்ட் மூலமா கிடைக்க உதவி செய்யறோம்.

  ஸோ, டயல் : 4343 8888
- போட்டி குறித்த முடிவுகளில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.



# விஜய் வின்னர்ஸ்-7

## தொடர் சங்கிலிப் போட்டி பரிசு பெற்றோர் விவரம்...

1. ஜே.ராஜேஸ்வரி, சேலம்
2. பி.அபினேஷ், தஞ்சாவூர்
3. எம்.மன்சூர் அலிகான், முதுபேட்
4. வி.ஸ்ரீராம், திருச்சி
5. க.மோகன், திருவண்ணாமலை
6. எஸ்.அனிருத் சித்தார்த், சென்னை
7. எஸ்.சுகன்யா, திருச்சி
8. கே.சுலோசனா, மங்கலம்
9. பி.புவனேஷ், தஞ்சாவூர்
10. தி.கலைச்செல்வன், திருச்சி

* முதல் பத்து கூப்பன்களை அனுப்பிய மேற்கண்டோருக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட் பரிசாக அனுப்பி வைக்கப்படும்.
* குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ் அனுப்பி வைக்கப்படும்.

## இந்த வாரக் கேள்விகள்!

கடைசி தேதி : 24.07.2008

1. விஜய்யின் தாய் மாமா யார்?
   - ☐ பாடகர் எஸ்.என்.சுரேந்தர்
   - ☐ பாடகர் ஜேசுதாஸ்
2. 'நான் ஒரு தடவை முடிவு பண்ணிட்டா, என் பேச்சை நானே கேட்க மாட்டேன்' - இது எந்தப் பட டயலாக்?
   - ☐ போக்கிரி ☐ வசந்த வாசல்
3. விஜய் ரசிகர் மன்றக் கொடியில் உள்ள வாசகம்
   - ☐ நம்மால் முடியும் ☐ உன்னால் முடியும்
4. 'வில்லு' படத்தில் விஜய்யின் ஜோடி
   - ☐ த்ரிஷா ☐ நயன்தாரா
5. விஜய்க்கு தமிழ்நாட்டில் எத்தனை ரசிகர் மன்றங்கள் உள்ளன?
   - ☐ 25,000க்கு மேல் ☐ 50,000க்கு மேல்

பெயர் : ........................................ வயது : ..........

முகவரி : ........................................................................

........................................................................

செல் : ........................ இ.மெயில் : ........................

போட்டி கூப்பன் அனுப்ப வேண்டிய முகவரி :

**விஜய் வின்னர்ஸ் போட்டி - 10,**

கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு ரோடு,

ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

# ஆர். லதா



# பலம்

நண்பன் சாம்சன் மெக்சி கோவிலிருந்து என் வீட்டுக்கு வந்திருந்தான். அவனுக்கு நம் நாட்டு பண்பாடு, பழக்க வழக்கங்களில் அதீத நாட்டம். நாலு முழ வேட்டியும், அரைக்கை சட்டையும் பிடிவாதமாய் அணிந்தான். பந்திப் பாயில் சிரமப்பட்டு சம்மணமிட்டு அமர்ந்து, தலைவாழை இலையில் வழிய வழிய சாப்பிட்டான்.

நெடுஞ்சாலையிலிருக்கும் ஒரு கோயிலில் திருவிழா கூட்டம் வேறு. என்னென்ன ரசனையோ எல்லாவற்றையும் படம் பிடித்தான்.

எங்கு போனாலும் பேருந்தில்தான் போக வேண்டும் என பிடிவாதமாய் இருந்தான். எனக்குத் தர்மசங்கடமாய் இருந்தது. குண்டும் குழியுமாகச் சாலைகள்; திறந்து கிடக்கும் சாக்கடைகள்; குப்பைக் கூளம்; மழை பெய்த சேறு சகதி; மக்கள் கொஞ்சம்கூட வெட்கப்படாமல் துப்பும் எச்சில். வீதியைச் சிவப்பாக்கும் வெற்றிலைப் பாக்கு. காற்றில் துர்நாற்றம், கொசுக்கடி. எனக்கு ஒரு நாள் அலைச்சலே போதும் போதும் என்றிருந்தது. எத்தனை அசிங்கம்! அவமானம். எனக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது.

நம் நாட்டு மானம் இந்த வெளிநாட்டுக்காரன் முன்பா கப்பலேற வேண்டும்? அவன் நாட்டுச் சுத்தமும் அழகும் எங்கே? நம் நாட்டு அசுத்தமும், ஆபாசமும் எங்கே? என்ன பேசுவது என்பது தெரியாமல் நான் மயங்கி நின்றபோது, சாம்சன் என் முதுகைத் தட்டினான்.

''இரேட்! உங்கள் நாட்டை நினைக்க, நினைக்க எனக்கு ஆச்சர்யமாகவும், பெருமையாகவும் இருக்கிறது. நானும் வந்த இந்த ஒரு வாரத்தில் கவனித்தேன். ஆணும், பெண்ணும் அவர்கள் கணவன், மனைவியே ஆனாலும் ஒரு கௌரவமான இடைவெளியுடன், மரியாதையாக தெருவிலும், பொது இடங்களிலும் நடந்து கொள்வதைப் பார்த்தேன். எங்கள் நாடென்றால், அணைப்பதும், இறுகத் தழுவுவதும், உதட்டோடு உதடு கடித்து முத்தமிடுவதும் சர்வ சாதாரணமாய் நடக்கும். இங்கு அது மாதிரி ஒரு காட்சியைக்கூட நான் காணவில்லை. இரண்டாவது, பொது இடங்களில் தாய்மார்கள் தம் குழந்தைகளுக்குப் பாலூட்டுவதைப் பார்த்தேன். அப்பொழுதெல்லாம் ஓர் ஆண்கூட வித்தியாசமாய்ப் பார்த்ததோ, ஏன் அந்தத் திசையில் திரும்பியதோ கூட இல்லை. தாய்மைக்கு இங்கு இருக்கும் மதிப்பும், மரியாதையும், வேறு எங்கும் பார்க்க முடியாத ஓர் அற்புதம். எனக்கு மெய் சிலிர்க்கிறது. இந்தப் பண்பாடுதான் உங்கள் நாட்டின் பலம்... அதற்கு என் வந்தனம்!'' என்று சாம்சன் சொன்னபோது, எனக்குப் பெருமையாகவும் அவனின் மாற்றுப் பார்வை ஆச்சரியமாகவும் இருந்தது. ●

# உனக்கு வந்ததா இந்தக் கனவு?





பூமி உடல்மீது விழும்
கண்ணாடிச் சில்லுகளாய்
பாலிதீன் பைகள்...

ஓஸோன் சட்டையில்
புகை ஊசி
பொத்தல்கள்...

சுவாசக் காற்றில்
வாகன எச்சமாய்
நச்சு பூச்சுகள்...

காடுகளில்
குயில் கூவல்
அடங்கி
கோடாரிகளின் சத்தம்...

ஆற்றுநீரை
அள்ளிப் பருகும் காலம்
கற்பனையாகி,

பாதம் நனைக்கவே
பயம் கொள்ளும்
சாயக் கழிவுகளின் வீச்சம்...

உறக்கம் தின்று உன்னை
எழுப்பவில்லையா
நாளை
மானுட விதைகள்
அழுகும் கனவு.





- திருவைக்குமரன்

# தராசு



# தி.மு.க.வின், தினகரன் பகிஷ்கரிப்பு...?

● கே.தெய்வசிகாமணி,
சென்னை - 82

? 'தி.மு.க.வுக்கும் தினகரன் பத்திரிகைக்கும் இனி எவ்விதத் தொடர்பும் இல்லை; கழகத்தவர் யாரும் அதில் விளம்பரங்கள் கொடுக்க வேண்டாம்' என்று தி.மு.க. அறிவித்துள்ளது பற்றி...?

! இது கட்சியின் முடிவு என்பது போலவும் ஆட்சிக்கும் இந்த அறிவிப்புக்கும் சம்பந்தமில்லை என்பது போலவும் ஒரு மாயத் தோற்றம் உருவாக்கப்பட்டுள்ளது. ஆனால், கருணாநிதி சம்மதமின்றி இத்தகைய அறிக்கை வெளி வராது என்பது எல்லோருக்கும் தெரியும். ஆக, அரசு விளம்பரங்கள் மட்டும் அல்ல, அரசு ஆதரவு தேவைப் படும் நிறுவன விளம்பரங் களும்கூட, தினகரனுக்கு மட்டு மின்றி, அரசு கொள்கைகளை எதிர்த்துச் செய்திகள் வெளி யிடும் எந்தப் பத்திரிகைக்கும் போகக் கூடாது என்று மறைமுக உத்தரவு பிறப்பித்ததாகிறது.



* இழுக்கு செய்யும் புகழ்ச்சி!

* எட்டாயிரம் கோடி ஆடம்பரம்!

* முளை விட்டுள்ள திட்டம்!



● எம்.சம்பத்,
வேலாயுதம்பாளையம்

? முகேஷ் அம்பானி, மூவர் அடங்கிய தம் குடும்பத்துக்கு, எட்டாயிரம் கோடி ரூபாய் செலவில் வீடு கட்டி முடித்துள்ளாரே - இது சரியா?

! சட்டப்படி சரியாக இருக்கலாம். ஆனால், அருவருப்பான, மன்னிக்க முடியாத ஆடம்பரம்.

● எஸ். பக்கிரிசாமி, திருவாரூர்

? தமிழகத்தில் கிடைக்கும் ஆயுத புதையல்கள் பற்றி...?

! கிடைக்கும் புதையல்கள், கிடைக்காமல் மறைந்திருப்பவை பற்றிய கவலையை அளிக்கின்றன.

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

? செவ்வாய் கிரஹத்தில் பனிக்கட்

**டிகள் இருப்பதை, அமெரிக்க நாசா அமைப்பு அனுப்பிய ஃபீனிக்ஸ் விண் கலம் உறுதி செய்துள்ளதே?**

! விஞ்ஞான அனுமானத்தை உறுதி செய்யும் இந்தச் செய்தி குளிர்ச்சியானது எனில், ஆர்க்டிக் பிரதேசத்தில் முதல்முறையாக, வரவுள்ள கோடையின்போது பனியே இல்லாது உருகிப் போகும் என்கிற பயங்கர ஆருடம், புவி வெப்பம் குறித்து அச்சுறுத்துகிறது.

● **ரேவதிப்பிரியன், ஈரோடு**

**? கல்யாணம் ஆகாத ஐம்பது வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்கு, உதவித்தொகை வழங்கிட உத்தரவிட்டுள்ள கலைஞரின் திட்டம் பாராட்டுக்குரியதுதானே...?**

! இது போன்ற உதவித் தொகைகளைக் குறைத்துக்கொண்டே வந்து, இறுதியில் நிறுத்திவிடுவதே உத்தமம். தாற்சார்புக்கும் தன்னிறைவுக்கும் களம் அமைத்து, சமுதாய மேம்பாட்டை ஊக்குவிப்பதே அரசுக்கு அழகு.

● **பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

**? கோயில்களில் ஆன்மிக நூலகம் அமைக்க முதல்வர் ஆணையிட்டதைப் பாராட்டி, 'சேக்கிழார் இப்போது உயிரோடிருந்தால், கலைஞரின் தொண்டுகளைப் பற்றித்தான் முதலில் பாடியிருப்பார்' என முன்னாள் நீதிபதி ஏ.ஆர்.லக்ஷ்மணன் கூறியுள்ளது குறித்து?**

! அட லக்ஷ்மணா! புகழ் பாடறதுன்னா நீங்களே பாடிட்டுப் போங்களேன். போய்ச் சேர்ந்த பெரியவங்கள ஏன் இழுத்து, அவங்களுக்கும் உங்களுக்கும் சேர்த்து இழுக்கு உண்டாக்கறீங்க!

● **எஸ். பக்கிரிசாமி, திருவாரூர்**

**? மதுரை நிகழ்ச்சி ஒன்றில் கனிமொழியை, 'வாழும் பெண் பெரியார்' என்று பாராட்டியது பற்றி...?**

! அதனை அவர் அதே மேடையில் நிராகரித்து, பெரியார் பள்ளியில் தாம் ஆரம்ப நிலை மாணவர்தான் எனப் பேசியது, அவரது அடக்கத்தை மட்டுமின்றி, பெரியார்பால் அவர் கொண்ட ஈடுபாட்டையும் மரியாதையையும் வெளிப்படுத்தியது.

● **பா.சு.மணிவண்ணன், திருப்பூர்**

**? ஆட்சியாளர்களைக் கண்டால் ஏன் அதிகாரிகள் பயப்படுகிறார்கள்?**

! எம்.பாஸ்கரின் கேள்வியே உங்கள் கேள்விக்கு விடை!

● **எம்.பாஸ்கர், திண்டுக்கல்**

**? அமைச்சர் எ.வ.வேலுவுக்குச் சொந்தமான பள்ளியில், பன்னிரண்டாம் வகுப்பு பொதுத் தேர்வின்போது ஆய்வு மேற்கொண்டதற்காக, கல்வித்துறை அதிகாரிகளுக்கும் ஆசிரியர்களுக்கும் இடமாற்ற உத்தரவு பறந்துள்ளதே?**

● **சி.விஜயகுமார், தேவனாங்குறிச்சி**

**? இன்றைய அரசியல்வாதிகள் வெறும் வாக்கு கொடுப்பதை, வாக்குறுதி என்று கூறிக்கொள்கிறார்களே... கொடுத்த வாக்கை நிறைவு செய்தால்தானே வாக்குறுதி என்று அர்த்தம்?**

! கொடுக்கப்படுவதும் வாக்குறுதிதான்; நிறைவேற்றப்படுவதும் வாக்குறுதிதான். கொடுக்கப்படும் வாக்குறுதிகள் எல்லாமே நிறைவேற்றப்பட வேண்டிய அவசியமில்லை என்பது அரசியலில் புதிய கொள்கை.

● **கே.துரைசாமி, மங்கலப்பட்டி**

**? பெட்ரோலிய நிறுவனங்கள் நஷ்டமடைவதாகக் கூறுவது வியப்பாக இருக்கிறதே... அதிக விலைக்கு வாங்கி, குறைத்து விற்பது சரியில்லையே?**

! பெட்ரோல், டீசல் விலை என்பது,

✱ நீண்டு வரும்...



✱...பட்டியல்!





* மெய்யான தன்னடக்கம்



* பந்தாடப்படும் நேர்மை!

*ரூ. 376 கோடி மதிப்பிலான முதல் கட்ட பணிகளுக்கு, முதல்வர் பிள்ளையார் சுழி போட்டிருப்பது பற்றி...?*

! அவருக்குப் பிள்ளையார் சுழியில் நம்பிக்கை இல்லாவிட்டாலும், நல்ல திட்டம் நன்கு நிறைவேற, நாம் விக்ன விநாயகனைப் பிரார்த்திப்போம்.

● **கு. அருணாசலம், தென்காசி** ❐

*? தொடர்கதையாக*

மர்ம முடிச்சுகள் பல கொண்ட உற்பத்திச் செலவு மற்றும் பலவித வரிகளை உள்ளடக்கிய பயங்கரச் சிக்கல். ஒன்று மட்டும் நிச்சயம். உலகச் சந்தையில் கச்சா எண்ணெய் விலைக்கும் நமக்கு வினியோகிக்கப்படும் பெட்ரோல், டீசல் விலைக்கும், மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசம் உண்டு. பெட்ரோலிய நிறுவனங்கள் அடைவதாகக் கூறப்படும் நஷ்டமும் நம் தலையில்தான் விடியும்.

● **இரா.கல்யாணசுந்தரம், மதுரை**

*? அரசியலில் பிரவேசிக்க நடிகர் பிரபு ஆயத்தமாகிவிட்டார். அவரது தந்தையே நொந்துபோன துறையில் அவரால் என்ன செய்ய முடியும்?*

● **இரா.சண்முகம், கடலூர் துறைமுகம்**

*? அடடா, நம்ம விஜய் சாரும் கொடி ரிலீஸ் பண்ணி அசத்திட்டாரு... லிஸ்ட் நீளுதுங்களே! இது சரியா?*

! இருவருக்கும் ஒரே பதில்தான். பிரபுவோ விஜய்யோ செய்வது தப்புன்னு எப்படிச் சொல்ல முடியும்? அவங்களுக்கு உரிமை இருக்கு, நிலைநாட்டிக்கறாங்க. ஸ்டைலிலும் நடிப்பிலும் கொடி நாட்டிட்டா அரசியலிலும் கொடி நாட்டறதுன்னது, இன்னைக்கு நடிப்புலக இலக்கணமா மாறிட்டு வருதில்ல...!

● **ஜி.கிருஷ்ணமூர்த்தி, சென்னை - 11**

*? தமிழக நதிகளை இணைக்க*

❐ ரூ. 100 பரிசு பெறுபவர்:
**கு.அருணாசலம்,**
தென்காசி

* ரூ. 50 பரிசு பெறுபவர்:
**டி.சுப்பிரமணியன்,**
அவினாசி

*கோடி கோடியான விவசாயக்கடன் தள்ளுபடி! நம் நாட்டின் பண வீக்கம் மற்றும் விலைவாசி உயர்வுக்கு இதுவும் ஒரு காரணம்தானே?*

! ஆமாம்! ஆமாம்! ஆமாம்! ஆனால், எதிர்க்கட்சிகள்கூட அதைச் சுட்டிக் காட்டலை. காரணம், வோட்டு வங்கிக்கு நஷ்டம் ஏற்படும் என்கிற பயம்தான்.

● **டி. சுப்பிரமணியன், அவினாசி** *

*? பலமான கூட்டணி இருப்பதால் தங்களை அசைக்க முடியாது என்ற தைரியத்தில்தான், கலைஞர் விலைவாசி, மின்வெட்டுப் பிரச்னைகளில் இவ்வளவு அலட்சியமாக இருக்கிறாரா?*

! பலமான கூட்டணி தரும் அலட்சியம் என்பதைக் காட்டிலும், பிரச்னையின் பிரம்மாண்டத்தை எதிர்கொள்ளவியலாத கொள்கை பலவீனம்தான் காரணம். ○

# கால் கிலோ அரை கிலோ காதல் கனவு

நாளையோடு விடுமுறை முடிகிறது. ஓடியது தெரியாமல் ஓடி முடிந்துவிட்ட ஒரு மாதம். முப்பது நாட்களில் தூங்கிய நேரம் போக, மிச்ச நேரமெல்லாம் மனத்துக்குள் வளர்மதியை நினைத்துக்கொண்டிருந்தது தவிர, வேறென்ன செய்தோம் என்று பத்மநாபன் யோசித்துப் பார்த்தான். குறிப்பாக ஏதும் நினைவுக்கு வரவில்லை.

நண்பர்கள் யாருமில்லை. எல்லோருக்கும் விடுமுறையைக் கழிக்க, ஒரு அத்தை வீடு, மாமா வீடு, தாத்தா வீடு என்று ஏதேனும் இருக்கிறது. தனக்கு மட்டும் பைபாஸ் முத்துமாரியம்மன் கோயில்தான் போக்கிடம்.

'ஏன், ஒனக்கென்னடா கொறைச்சல்? போனன்னா அத்தைக்காரி ஆசையாத்தான் இருப்பா. உங்கம்மா உடுவாளா கேளு. பஸ் ஏத்தி வுட்டன்னா கருங்குழில அவ வந்து கூட்டிக்கினு போயிடுவா' என்று அப்பா ஒரு நாள் சொன்னார்.

குடும்ப அரசியலின் ஏதோ ஒரு கண்ணியில், அத்தை உறவு விடுபட்டிருக்கிறது என்பதை பத்மநாபன் புரிந்து கொண்டான்.

யாருமற்ற தனிமையில் வளர்மதியை நினைத்துக் கொண்டிருந்தால் போதும். அதுவும் அன்றைக்கு திடீ ரென்று நினைத்துக்கொண்டு அவள் வீட்டுக்குப் புறப் பட்டுப் போனபோது, வழியிலேயே கண்ணாடிக்காரர் கடை வாசலில் அவளைச் சந்திக்க நேர்ந்தது ஆயுசுக்கும் மறக்காது.

முற்றிலும் மாறுபட்ட வளர்மதியை அன்றைக்கு அவன் கண்டான். யூனிஃபார்ம் இல்லை. நீல வண் ணத்தில், கவிழ்ந்த V ஷேப்பில் நெஞ்சையள்ளும் தாவணி. மடித்துக்கட்டிய பின்னலும் அங்கே சிற கடிக்கும் பட்டாம்பூச்சி ரிப்பனும்.

''டேய் குடுமி! நீயா?'' என்றாள் வியப்புடன்.

அவன் பார்த்தபோது அவள் தன் பத்து விரல் களிலும் மோதிர வத்தல் அணிந்திருந்தாள். ஐந்து பைசாவுக்கு இரண்டு என்று கிடைக்கும் மஞ்சள் நிற மோதிரம். அப்படியே கடித்துச் சாப்பிட்டுக் கொண்டே போனால், இறுதியில் பத்து விரல்களும் எண்ணெய்ப் பிசுபிசுப்புடன் பளபளக்கும்.

பத்மநாபனுக்கு அதைப் பார்த்ததுமே வெடுக்கென்று



தானொரு மோதிரத்தைக் கடிக்க வேண்டும்போலிருந்தது. ஆனால், வளர்மதியின் விரல். தப்பு. அவளே நீட்டி, எடுத்துக்கோ என்றால் நன்றாக இருக்கும். அப்போதுகூட மரியாதையாக விரலிலிருந்து உருவினால்தான் அழகே தவிர, கடிப்பதல்ல.

''ஊருக்கு எங்கியும் போகலியாடா?'' என்று வளர்மதி கேட்டாள்.

''நீ போகலியா?''

''மெட்ராஸ்தான் போனேன்; எங்க பெரியம்மா வீட்டுக்கு நாலு நாள். போரடிச்சது. வந்துட்டேன்'' என்றாள்.

வேறென்ன பேசலாம்? பத்மநாபன் யோசித்தான். பத்தாம் வகுப்புக்கான புத்தகங்கள் வாங்கிவிட்டாளா? படிக்கத் தொடங்கிவிட்டாளா? யாரிடமாவது ட்யூஷன் போகப்போகிறாளா? லீவில் என்ன படம் பார்த்தாள் அல்லது பார்க்கத் திட்டமிட்டிருக்கிறாள்? ராஜாத்தி எங்கே போயிருக்கிறாள்? க்ளாரா பர்த்டே இந்த மாதம்தானே வருகிறது?

ஆயிரம் விஷயங்கள் இல்லாமல் இல்லை. ஆனால், 'அன்பே, நீ என்னை எப்போது காதலிக்கப் போகிறாய்? அதைச் சொல் முதலில்.'

திரும்பத் திரும்ப அதையே கேட்பது அவனுக்கே அலுப்பாக இருந்தது. பார்த்துக் கொண்டிருப்பதே காதலல்லவா?

மனத்துக்குள் என்னென்னவோ தோன்றுகிறது. சொற்களில்லாமல் உணர்ச்சி, ஒரு வடிவமற்ற வர்ணஜாலக் குழம்பாகப் பொங்கிப் பொங்கித் தணிகிறது. அடிப்படை ஒன்றுதான்; வேட்கையும் அதுவேதான். ஆனால்,

ஜிலுஜிலு தொடர் கதை

14

பா.ராகவன்

எப்போது வடிவம் பெறும்?

''பத்தாங்கிளாஸுக்குப் படிக்கிறியாடா?'' வளர்மதிதான் கேட்டாள்.

சுதாரித்து, ''இன்னும் இல்லை'' என்று பதில் சொன்னான். என்ன ஆனாலும், இந்தச் சந்திப்பில் காதல் குறித்து மட்டும் பேசுவதில்லை என்று முடிவு செய்து கொண்டான். அவள் எதிர்பார்க்கட்டுமே? 'ஏன்டா குடுமி, என்னை லவ் பண்றேன்னு நீ சொல்லவேயில்ல?' கேட்கட்டும். கேட்கத் தோன்றுமல்லவா. கடந்த ஆண்டு முழுதும் ஒவ்வொரு முறை பேசும்போதும் சொல்லியிருக்கிறான்.

சீ போடா... லூஸு... பைத்தியம் மாதிரி பேசாத. பேக்கு. எங்க தாத்தாக்குத் தெரிஞ்சா... ஹெட் மாஸ்டர் என்ன பண்ணுவாரு தெரியுமா? நீ உதை படப்போற... உங்கப்பாட்ட வந்து சொல்லட்டுமா? வேணாண்டா குடுமி. இதெல்லாம் தப்பு. வேற எதுவுமே பேசமாட்டியா?

சந்தர்ப்பங்களுக்கேற்ப பதில்கள் வெவ்வேறு விதங்களில் வந்திருக்கின்றன. மிகக் கவனமாக ஒருமுறைகூட அவள் கோபத்தை வெளிக்காட்டியதில்லை. காதல் ஒரு பெரிய விஷயமே இல்லை என்பதாக.

உண்மையிலேயே அப்படித்தான் நினைக்கிறாளா?

வளர்மதி பற்றிய ஞாபகம் என்றால், முதலில் வருவது அவளது முகம். அப்புறம் குரல். சீ போடா என்கிற செல்லக் கோபம். அப்புறம் அந்த வி ஷேப் தாவணி. பட்டாம்பூச்சி பறக்கிற ரிப்பன். ஆ, அந்தப் பாதங்கள்! பார்த்துக்கொண்டே இருக்கலாம். அவளுக்கென்றே எங்கிருந்தோ பூப் போட்ட செருப்பு கிடைத்துவிடுகிறது. ஒரு பூவின்மீது பயணம் செய்யும் இன்னொரு பூ

''ஊருக்கு எங்கயும் போகலியாடா?'' என்று வளர்மதி கேட்டாள்.

''இல்ல வளரு. சொந்தக்காரங்க வீட்டுக்கெல்லாம்போறதில்ல.''

''படம் போனியா?''

''இல்ல.''

''படிக்கிறியான்ன?''

யோசித்தான்.

''வேற என்னதான் பண்ற?''

''சும்மாதான் வளரு இருக்கேன்.''

''ஐயோ, சும்மாருக்கற மூஞ்சியப் பாரு'' என்று சொல்லிவிட்டு, ஒரு மோதிரத்தைக் கடித்தபடி நடக்கத் தொடங்கிவிட்டாள். பத்மநாபனுக்கு அந்தச் சந்திப்பே ஒரு மாதத்தைக் கடத்தப் போதுமானதாக இருந்தது. ரகசியமாக ஒரு நோட்டுப் புத்தகத்தில் நிறைய கவிதைகள் எழுதினான்.

***அன்பே வளர்மதி!***<br>***உன்னை நினைத்து***<br>***ராத்திரியெல்லாம் நான்***<br>***தூங்குவதே இல்லை***<br>***நீ கண்ணைவிட்டு இறங்கினால்தானே***<br>***நான் கண்மூட முடியும்***

என்று எழுதி ஒரு கேள்விக்குறியும் இரண்டு ஆச்சர்யக்குறிகளும் போட்டுவிட்டுப் பார்த்தால், கவிதை பிரமாதமாக வந்துவிட்டதுபோலத் தோன்றியது. ஒரே பரவசமாகிவிட்டது.

மேலும் மேலும் நிறைய கவிதைகள் எழுதினான். ஒரு பக்கம் ஓவியனாகும் என்



''ஃபோனை ஒட்டுக் கேட்கற விஷயத்துல மாட்டிக்கிட்டு முழிக்கிறார் நம்ம அண்ணன்...''

''ஏன்? என்னாச்சு?''

''அவசரத்துல நம்ம கட்சித் தலைவரோட ஃபோனையே ஒட்டுக் கேட்டுத் தொலைச்சிருக்கார்.''

– கே.ஆனந்தன்



## காலமும் கலைஞர்களும்

"காலத்துக்கும் கலைஞர்களுக்குமான போட்டி மிகக் கடுமையானது. சில கலைஞர்களைக் காலம் விட்டுவிட்டு ஓடி விடும். சில கலைஞர்கள் கால ஓட்டத்தைவிட்டு ஒதுங்கிக்கொள்வார்கள். இந்த இரண்டுமில்லாது, என் நண்பன் டி.கே.போஸ் கால ஓட்டத்தோடு கலக்கப் பழகியவன். அதனால்தான் அவனால் கலைஞனாகவும், கதாசிரியனாகவும் ஜொலிக்க முடிகிறது'' என்றார் 'கொடைக்கானல்' படத்தின் கேசட் வெளியீட்டு விழாவில் இயக்குநர் பாரதிராஜா. சரி, யார் இந்த டி.கே.போஸ்? 'கொடைக்கானல்' படத்தின் இயக்குநர். படத்தைப் பற்றி அவரிடம் கேட்டபோது, ''எனக்கு வயசானாலும் இளமைக்குரிய குளுமையோடும் துள்ளலோடும் 'கொடைக்கானல்' வந்திருக்கிறது. படம் வரட்டும், என் வயதும் குறைந்து போகும்'' என்கிறார்.

**- அமுதா**

ணம் வேறு உயிரை வாங்கிக் கொண்டிருந்தது. அப்பா எங்கேயோ புக் பேங்கில் சொல்லி வைத்து, பத்தாம் வகுப்புப் புத்தகங்களில் இரண்டு மூன்றை வாங்கி வந்திருந்தார். அட்டை கிழிந்திருந்த புத்தகம்.

'மெதுவா படி. ஒண்ணும் அவசரமில்ல' என்று எதற்கும் சொல்லி வைத்தார். அவரையாவது சந்தோஷப்படுத்தலாம் என்று, அடுத்த இரண்டு தினங்கள் பத்தாம் வகுப்பு அறிவியல் புத்தகத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு, உள்ளுக்குள் நோட்டுப் புத்தகத்தில் வளர்மதி கவிதைகள் எழுதினான்.

ஒரு விஷயம் அவனுக்குத் தெளிவாகிவிட்டது. அப்பா இனி தன்னை இம்சிக்கப் போவதில்லை. வளர்மதி தன் காதலை ஏற்கும் வரை, தனது இம்சைகள் ஓயப் போவதுமில்லை. பைபாஸ் முத்துமாரியம்மா! இன்னும் எத்தனை நாளைக்கு என்னைப் படுத்தப் போகிறாய்?

**ம**றுநாள் ரிசல்ட் என்றதும், அம்மா யூனிஃபார்ம்களைத் தோய்த்து அயர்ன் செய்து வைத்தாள். அவனது அழுக்கு சுமந்த புத்தகப் பைக்கும் ஒரு விடிவு வந்தது. தோய்த்துக் காயப்போட்டதில் நல்ல மொடமொடப்பாக விரைத்துக்கொண்டு நின்றது. அப்பா புதிய பேனா ஒன்று வாங்கித் தந்திருந்தார். இந்த முறை பாஸ் பண்ணுவானா என்கிற கவலை இல்லை. ரேங்க் எத்தனை என்பதுதான்.

'எண்டா எப்படியும் அஞ்சு ரேங்குக்குள்ள வருவ இல்ல?' என்று அன்று இரவு அப்பா கேட்டார்.

பத்மநாபனுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. தேர்வு எப்படி எழுதினோம் என்பதே நினைவில் இல்லை.

கடவுள் விட்ட வழி என்று நினைத்துக் கொண்டுதான் ரிசல்ட் பார்க்கப் போனான். கும்பலில் நோட்டீஸ் போர்டை நெருங்கி, நம்பர் தேடி, இருப்பதைக் கண்டு அரை வினாடி திருப்தியடைந்துவிட்டு, கூட்டத்தை விட்டு வெளியே வந்ததுமே மகிழ்ச்சி என்ற ஒன்று தன்னிடம் இல்லை என்பதை அவன் கண்டுகொண்டான்.

ரிசல்ட் பார்க்க வளர்மதி வரவில்லை. அழுகை வந்தது. யாருடனும் பேசப் பிடிக்காமல், அவன் விறுவிறுவென்று வீட்டுக்கு நடக்கத் தொடங்கியபோது, தூரத்தில் நின்றுகொண்டிருந்த ஹெட் மாஸ்டர் அவனைப் பார்த்து, கையசைத்தார். அருகே வரும்படி கூப்பிட்டார்.

*(தொடரும்)*

# ஆண் சுமக்கும்



● ஆர்.கோபாலன்,
மேற்கு மாம்பலம்

***பெண் வடிவத்தின் அழகைக் கூட்டுவது சாரியா இல்லை, சுடிதாரா?***

என்னை அப்படிப் பாக்காதீங்க. நான் ரொம்ப 'மடி-sir.'

● எம்.சூர்யா, விழுப்புரம்

***எனது நண்பன் எந்தக் கேள்விக்கும் விரல் நுனில பதில் வைச்சிருக்கான். அவனை எப்படிப் பாராட்டுவது?***

நகஸ்துதி செய்து!

● எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்

***விலை-வாசி ஏற்றத்துக்கு உண்மையான காரணம் கூறுங்கள்...?***

நாம் சுக-வாசியாக இருப்பதுதான்!

● கே.எஸ்.கோவர்த்தனன், வேளச்சேரி

***பண வசதி படைத்தவர்களை 'பசையுள்ள' பேர்வழி எனக் கூறுகிறோம். ஏன்?***

அனைவரும் அவர்களிடம் 'ஒட்டிக் கொள்வதால்'.

● வைஜயந்தி, வேலூர்

***நீங்கள் உங்கள் பெயரை மாற்றிக் கொள்ளும் நிலைமை வந்தால்..?***

இனி மாற்ற முடியாதபடி, 'அனாமிகா' என்று மாற்றிக்கொள்வேன்.

● என்.சண்முகம்,
ஆதமங்கலம் புதூர்

***என்னிடம் உள்ள ஒரு பெரிய பலவீனம், வள்ளுவனைப் படித்தும் வள்ளலாரைப் பின்பற்றியும், தொட்டதற்கெல்லாம் மூக்குக்கு மேல் கோபம் வருகிறது. என்ன செய்ய?***

வள்ளுவரையும், வள்ளலாரையும் படித்தும் ஏன் 'வள் வள்' என்று விழுகிறீர்கள்? பலவீனமான சண்முகரே, திருக்குறள்-திருவருட்பா தவிர வேறு எதையும் பலமாகத் தொடாதீர்கள். அப்படி வேறு எதையாவது தொட்டு, தேவையில்லாமல் உங்கள் மூக்கை நுழைக்க வேண்டிய கட்டாயம் வந்தால், முதல் காரியமாக உங்கள் மூக்கை நீங்களே தொட்டுக்கொள்ளுங்கள். வரப்போகும் கோபம் நினைவுக்கு வரும். 'வரும் முன் கோபம் தவிர்க்கலாம்'.

பிறகு பாருங்கள், 'அட, நம்ம சண்முகம் இன்முகம் ஆயிட்டாரே' என்று அனைவரும் தங்கள் மூக்கின் மேல் விரல் வைப்பார்கள்!

● என்.சீதாலட்சுமி, சென்னை

***ஆண்கள் 'கரு' சுமந்தால்...?***

ஆனானப்பட்ட, ஆனானப்பட்ட மகாவிஷ்ணுவே மோகினி என்ற பெண்ணாகித்தான் மணிகண்டனைச் சுமந்தார். பத்து மாதம் பத்திரமாகச் சுமக்கும் தாய்மை என்ற பலம், பெண்ணுக்குத்தான் உண்டு. இந்த விஷயத்தில் பலவீனமான ஆண் கரு சுமந்தால், பத்து மாதங்களில் காய்ந்து கருவாடாகி விடுவான். பழைய படி பெண்ணே கருவைச் சுமக்கட்டும். பிறக்கும் பிள்ளையை வளர்க்கும் கவலையை, ஆண் சுமக்கட்டும். ஆண் சுமக்கும் கரு, ஆண் எழுத்தாளர்கள் சுமக்கும் கதையின் கருவாக மட்டும் இருக்கக் கடவது.

# கிரேஸியைக் கேளுங்கள்

● என்.கோமதி, நெல்லை

***கிரேஸி டீ.வி. ஆரம்பித்தால், சேன லின் சின்னம் என்னவாக இருக்கும்?***

தாத்தாவாகிவிட்ட எனக்குத் தோன்றும் சின்னம், குழி விழச் சிரிக்கும் பேரக் குழந்தையின் கன்னம். சேனலின் பெயர் Grand-son T.V.!

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

***திருமதியின் கேள்விகளுக்குப் பதில் சொல்வது, எங்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்வது... எது கஷ்டமானது?***

நீங்கள் கேள்விகளைத் 'தபாலில்' கேட்பீர்கள். பதில் சொல்ல அவகாசம் இருக்கு. திருமதி, கேள்விகளைத் 'தபாலென்று' கேட்பாள். பதில் சொல்ல அவ அவகாசம் தரமாட்டாள். உங்கள் கேள்வியை சாய்ஸில் விடலாம். 'பட்டுப் புடைவையா இல்லை எட்டுக் கல் பேசரியா?' என்ற ரீதியில் திருமதி கேள்வியும் கேட்டு, சாய்ஸையும் நம்மிடமே விட்டு விடுவாள். உங்கள் கேள்விக்கு நியாயமான பதில் சொன்னால் நல்ல பேரு கிடைக்கும். திருமதியின் அநியாயமான கேள்விக்குப் பதில் சொல்லாவிட்டால், சோறு கிடைக்காது.

● அனன்யா, திருச்சி

***புத்திசாலி - அதி புத்திசாலி என்ன வேறுபாடு?***

பிரச்னைக்குத் தீர்வு காண்பவன் புத்திசாலி; அதற்கான பேரைத் தட்டிச் செல்பவன் அதி புத்திசாலி!

● பி.முத்துலெட்சுமி புகழேந்தி, ஸ்ரீரங்கம்

***தாய் - தந்தை பேச்சைக் கேட்காமல் இருக்கும் பெண்களைப் பற்றி..?***

நாகரிகம் தெரிந்த பெண்மணிகள். என்னதான் தாய் - தந்தையாய் இருந்தாலும், அவர்கள் கணவன் - மனைவி, அவர்களுக்குள் நடக்கும் அந்தரங்கமான பேச்சுவார்த்தையைக் கேட்பது அநாகரிகம் என்பதை அறிந்து, நாசூக்காக நகரும் லேடிகள்!

● த.ஞா.செ., நெல்லை

***'கத்திரி' வெய்யிலை எப்படிச் சமாளித்தீர்?***

'கத்திரி கோலா' குடித்தபடி!



## அஞ்சலி



அண்மையில் மறைந்த பிரபல ஜோதிட நிபுணர் திரு. அக்னி சர்மா குறித்த நினைவுகளை நம்மோடு பகிர்ந்து கொள்கிறார் வழக்குரைஞர் வீரராகவன்.

''சர்மாவுக்கு ஜோதிடம் என்பது தொழிலல்ல; சுவாசம். அவர் ஜோதிடத்தை எவரிடமும் சென்று கற்கவில்லை. அவரது அப்பா காசிராம் சர்மா போலீஸ் என்றாலும், ஜோதிடக் கலையில் வல்லவர். தமது 13 வயதிலிருந்து இறக்கிறவரை ஒருவரிடம்கூட ஜோதிடம் பார்த்ததற்காக பணம் வாங்கியதில்லை. எனக்கு அப்போது தொழிலில் பணக் கஷ்டம். சர்மாவுக்கு ஃபோன் பண்ணி விஷயத்தைச் சொன்னேன். அன்று ஞாயிறு. உடனே அவர், 'கவலைப்படாதே வியாழக் கிழமை உனக்குப் பணம் வந்து சேரும்' என்றார். அது போல எனக்கு நடந்தது. தமது இறுதிக் காலத்தைக்கூட துல்லியமாகக் கணித்துக் கூறியவர். அவரது ஆன்மா சாந்தி அடையட்டும்!'' என்றார்.

– மகிமைராஜன்

இரண்டாம் உலகப் போர். பர்மாவைக் கைப்பற்ற ஜப்பானியப் படைகள் கடுமையாக தாக்கிய நேரம். 1942, பிப்ரவரி 22ஆம் தேதி, இரண்டு படைகளைத் துணிச்சலுடன் வழி நடத்திக்கொண்டிருந்த அந்த இளைஞரின் மீது, ஒரு ஜப்பானிய மெஷின் துப்பாக்கி சரமாரியாக குண்டுகள் பொழிந்ததில் ஏழு குண்டுகள் அவரது உடலில் பாய்ந்தன. 'உயிர் பிழைப்பது நிச்சயமில்லை; இத்தகைய ஓர் ராணுவக் கேப்டனின் வீரச்செயலை, அவர் உயிருடன் இருக்கும்போதே கௌரவிப்பதுதான் சரி' என்று

## வீர வணக்கம்



# ஐ அம்

கூறி, உடனடியாக அந்தக் கேப்டனுக்கு 'மிலிட்டரி கிராஸ்' என்ற விருதினை வழங்கியது பிரிட்டிஷ் அரசு. அவருக்கு உடனடியாக அறுவை சிகிச்சை செய்து குண்டுகளை அகற்ற, வேறு ஒரு ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைக்கப்பட்டார். அதன் பிறகு ரங்கூனில் சிகிச்சையளிக்கப்பட்டு, கப்பல் மூலமாக இந்தியா வந்து சேர்ந்தார். அதன்பின் இந்திய ராணுவத்தில் பல முக்கிய பொறுப்புகளை வகித்துவிட்டு, சுதந்திர இந்தியாவின் முதல் ராணுவத் தளபதி ஆனார். அவர்தான் அண்மையில் மறைந்த ஃபீல்டு மார்ஷல் சாம் மானெக்ஷா.

இரண்டாம் உலகப் போரின்போது தம் மனைவியைப் பிரிந்து, பர்மாவில் மூன்றாண்டுகள் தங்கி இருந்து, போரில் ஈடுபட்ட அனுபவம் அவருக்கு உண்டு. அவருடைய மனைவி ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்த தகவல் வந்தபோதுகூட, அவரால் பர்மாவைவிட்டு நகர முடியவில்லை.

# அய்யா வழி



● ஆள்பவனின் அக்கிரமங்களுக்கு எதிராக ஆண்டவனே போராடும் கதை. 'அகிலத்திரட்டு' நூலை அடிப்படையாகக் கொண்டு, வெள்ளித் திரையில் வைகுண்ட சாமியை (சிவன் + விஷ்ணு) உலவவிட்டிருக்கிறார் இயக்குநர் பி.சி. அன்பழகன்.

● திருவிதாங்கூர் மன்னனின் சாதி துவேஷத்துக்கு எதிராக, பிரிந்துகிடக்கும் ஏழைகளை ஒன்று திரட்டும் மகானாகவே வாழ்ந்திருக்கும் ராஜாவின் நடிப்பில் ஒளியின் தேஜஸ்.

● அரசனுக்கு எதிராகச் சதிசெய்கிறார் என்ற குற்றச்சாட்டோடு, குதிரையில் கட்டி இழுத்து வருகையிலும் புன்முறுவல் பூத்த முகத்துடன் புல்லரிக்க வைக்கிறார்.

● திருவிதாங்கூர் மன்னர் பாத்திரத்தில், பாடகர் எஸ்.என். சுரேந்தர். இவர் நாக்கில் வசனங்கள் கவிதை தேன். வைகுண்டசாமியின் பக்தராக பாடகர் சீர்காழி சிவ சிதம்பரம்; தம் கம்பீரக் குரலால் நம்மைச் சிலிர்க்க வைக்கிறார்.

● பதினேழாம் நூற்றாண்டின் இயல்பு மாறாமல் படம்பிடித்திருக்கிறது ஆர்.செல்வா வின் கேமரா. பகவதி சிவநேசனின் இசையில் பாடல்கள் அனைத்தும் பக்தி ரசம்.

● உண்மைச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு ஆன்மிகத்தோடு சமூக விமர்சனத்தையும் முன்வைத்த இயக்குநருக்குப் பாராட்டுகள்.

– **கதிரவன்**

# ஓகே!



* மானெக்ஷா

**1971**ல் இந்தியா-பாகிஸ்தான் போரின் ஹீரோ இவர்தான். வங்கதேசம் என்ற நாடு உருவாகக் காரணம் இவரே! மிகத் துல்லியமாக ராணுவ நடவடிக்கைகளைத் திட்டமிட்டு, அவற்றைத் திறம்படச் செயல்படுத்தி, பாகிஸ்தானியப் படைகளைச் சரணடைய வைத்த அவரது ராஜதந்திரத்தை அன்றைக்கு மெச்சாதவரில்லை. 1973ல் அவருக்கு ஃபீல்டு மார்ஷல் என்ற கௌரவம் அளிக்கப்பட்டது. தவிர, பத்ம பூஷண், பத்ம விபூஷண் விருதுகளையும் பெற்றார்.

போர் முனையில் மரணத்தைப் பழித்தவர் மருத்துவமனையில் அமைதியாக அதனிடம் சரணடைந்தார்.

ராணுவ வட்டாரத்தில் இவருக்கு வைக்கப்பட்ட செல்லப் பெயர் : சாம் பகதூர்.

பணி ஓய்வு பெற்றபின் தமிழ்நாட்டில் குன்னூரில் வசித்து வந்தார் மானெக்ஷா. போர் முனையில மரணத்தைப் பழித்தவர் மருத்துவ மனையில் அமைதியாக அதனிடம் சரணடைந்தார். அவரது உடல் ராணுவ மரியாதையுடன், ஊட்டியில் அவரது மனைவியின் கல்லறைக்குப் பக்கத்திலேயே அடக்கம் செய்யப்பட்டது. மானெக்ஷா மரணம் அடைவதற்கு முன் சொன்ன வார்த்தை 'ஐ அம் ஓகே!'

கடைசியாகச் சொன்ன வார்த்தை 'ஐ அம் ஓகே!'

தொகுப்பு : **மௌலி**

நடிகர் கார்த்திக் நான்கு சுவருக்குள் தனியாக உட்கார்ந்து புலம்பிக்கொண்டு இருக்கிறார்.

**கார்த்திக்** : போச்சு... போச்சு... எல்லாம் போச்சு... சினிமாவும் போச்சு... கட்சியும் போச்சு...ம்... இப்ப நான் என்ன பண்றது? ஆளாளுக்கு தமிழ்நாட்டு முதல்வர்னு குரல்கொடுக்க ஆரம்பிச்சுட்டாங்க... நான் மட்டும் சும்மா இருந்தா ஒருத்தரும் மதிக்க மாட்டாங்களே...

*(அப்போது அவரின் செல்ஃபோன் அலற, எதிர்முனையில் சுப்ரமணியசுவாமி பேசுகிறார்)*

**சு.சுவாமி** : தம்பி... நான்தான் சுப்ர மணியசுவாமி பேசறேன்.

**கார்த்திக்** : எந்த சுப்ரமணியசுவாமி?

**சு.சுவாமி** : என்னைத் தெரியலன்னா அவன் மனுஷனாவே இருக்க முடியாது. இருந்தாலும் சொல்றேன். என்னை எல்லோரும் 'டீ பார்ட்டி' சுவாமின்னு சொல்லுவாங்க... இப்ப புரியுதா!

**கார்த்திக்** : *(அதிர்ச்சியுடன்)* ஓ... நீங்களா! எதுக்கு ஃபோன் செஞ்சிங்க?

**சு.சுவாமி** : நீங்க கைல கட்சியில்லாம கஷ்டப்படறதா கேள்விப்பட்டேன். அதான் நாம ரெண்டுபேரும் ஒண்ணு சேர்ந்தா உலகத்தையே ஆட்டி வெச்சிடலாம்.

**கார்த்திக்** : நாம கூட்டு சேர்ந்து என்ன பண்றது? தொண்டன்னு சொல்லிக்க ரெண்டு பேருக்குமே ஆளில்லையே...

**சு.சுவாமி** : தொண்டன் இல்லைன்னா என்ன... தலைவனா இருப்போம். என் ஆதரவு இல்லாம, உலகத்துல எவனும் ஆட்சி நடத்த முடியாது.

**கார்த்திக்** : இப்ப எனக்கு மனசு சரியில்லை. பத்து நாள் கழிச்சி ஃபோன் பண்ணுங்க...

**சு.சுவாமி** : உங்க மனசைக் கெடுத்தது யாருன்னு தெரியும். அந்த பிஸ்வாஸ் தானே... அவரை இ.பி.கோ... ஏதாவது ஒரு செக்ஷன்ல உள்ள தள்ளிப்புடுவோம், கவலைப்படாதீங்க...

*(ஃபோனை கட் செய்தபோது... 'ஐயா... சாமி' என்று குரல் வரவாசலுக்கு ஓடி வருகிறார் கார்த்திக். அங்கே கையில் ஒரு தட்டுடன் குண்டான பிச்சைக்காரன் நின்று கொண்டிருக்கிறான்)*

**பிச்சை** : சாமி... தர்மம் பண்ணுங்க சாமி... சாப்ட்டு ரெண்டு மணி நேரம் ஆகுது.

**கார்த்திக்** : உன்னைப் பார்த்தாலே தெரியுது. மணிக்கு ஒரு தரம் சோறு சாப்பிடுவேன்னு... சரி, சோறு போடறேன், என் கட்சியில உறுப்பினரா சேர்ந்துக்கறியா?

**பிச்சை** : கட்சியா! என்ன சாமி, சோத்துக்கு வந்தவனைச் சேத்துல தள்ளி

# ஜாலி ஸ்டோர்ஸ்



# அமெரிக்காவுக்கே ஆப்பு

உத்தமபுத்திரன்

வுடறீங்க...?

**கார்த்திக்** : ஏய்... நல்லா இருக்கு மேன்... சோத்துல... சேத்துல! நீதான் இனிமே கொள்கை பரப்புச் செயலாளர்.

**பிச்சை** : கட்சி பேரு என்ன சாமி?

**கார்த்திக்** : அதைப் பத்தி பின்னாடி யோசிப்போம். முதல்ல நீ போற வீடுகள்ல 'அம்மா தாயே, கார்த்திக் கட்சி ஆரம்பிச்சிருக்கார் சோறு போடுங்கம்மா...' அச்சச்சோ... தப்பாப் போயிடுமே... சோறு போடுங்கன்னு கேட்டுட்டு, அப்புறம் நான் கட்சி ஆரம்பிச்சதைச்



சொல்லு போ...

(என்றதும், அவன் தலையாட்டிவிட்டுச் செல்கிறான். அப்போது கமலஹாசன் காரில் வந்து இறங்க... வரவேற்று உள்ளே கூட்டிப்போகிறார்.)

**கார்த்திக்** : என்ன... கமல் சார்... நீங்க என்னைத் தேடி....

(அப்போது கமல் வேடத்தில் இருந்த அமெரிக்க அதிபர் புஷ், தன் வேஷத்தைக் கலைக்கிறார்)

**கார்த்திக்** : (ஆச்சர்யத்துடன்) என்ன புஷ் சார், இந்த வேஷம்...!

**புஷ்** : உங்க கமல், தசாவதாரத்துல என் கெட்டப்ல வரலாம், நான் கமல் கெட்டப்ல வரக்கூடாதா?

**கார்த்திக்** : அதுக்காக இல்லை... திடீர்ன்னு இந்தியா வந்திருக்கீங்களே, இங்கதான் என்னெய்க் கிணறு எதுவுமில்லையே...

**புஷ்** : அதுக்காக வரலை... கட்சி எப்படி நடத்தறது, ஆட்சிய எப்படிப் புடிக்கறதுன்னு உனக்குச் சொல்ல வந்தேன்.

நான் சொல்றபடி கேட்டா... உலக நாடுகள் எல்லாம் உன் காலடியில; நீ என் காலடியில. சம்மதமா?

**கார்த்திக்** : ஏ... என்ன சொல்றீங்க... இதெல்லாம் நடக்குமா?

**புஷ்** : ரொம்ப சிம்பிள். வோட்டுப் போடுங்கன்னு எழுதி கைல தட்டியோட நிக்கணும். அப்புறம், இருக்கிற ரெண்டு கட்சிக்காரங்களையும் ஒரே மேடையில ஏத்தி, பேச வைக்கணும்.



**கார்த்திக்** : ரெண்டு கட்சித் தலைவர்களா... அப்படின்னா, மத்த கட்சித் தலைவர்களைக் கூப்புடமாட்டீங்களா?

**புஷ்** : ஆளுங்கட்சி... எதிர்க் கட்சி-ரெண்டுதான் எங்க நாட்டுல இருக்கும்.

**கார்த்திக்** : அது சரி... இங்க ஜாதிக் கட்சியெல்லாம் சேர்த்து ஆயிரத்து நானூற்றி ஐம்பத்தி ஏழு கட்சிகள் இருக்கு.

**புஷ்** : *(அதிர்ச்சியுடன்)* ஜாதிக்கெல்லாம் கட்சி இருக்கா! அப்புறம்.

**கார்த்திக்** : வார்டு தேர்தலுக்குக்கூட பெரிய கலவரம் நடக்கும். பொது மக்கள் வோட்டை நாங்களே போட்டுக்குவோம். தடுத்தா, சோடா பாட்டில் பறக்கும்.

**புஷ்** : சரி போலீஸ் தடுக்காதா?

**கார்த்திக்** : தடுத்தா, கல்லெறிவோம்; காரை எரிப்போம்; பஸ்ஸை எரிப்போம்; உள்ள ஆளு இருந்தா அவங்களையும் எரிப்போம். லாரி ஓடாது... ரெயில் ஓடாது. வானத்துல விமானம் போனா, அது முன்னாடியும் குறுக்க படுப்போம். மொத்தத்துல ரத்த ஆறு ஓடும்.

**புஷ்** : மொத்தத்துல மக்களை நிம்மதியா விடமாட்டீங்க...

**கார்த்திக்** : முதலமைச்சரையே நிம்மதியா விடமாட்டோம். ஆரம்பத்துல கூட்டணி போட்டு ஜெயிப்போம். மறுநாளே ஆப்பு சீவி ரெடியா வெச்சிருப்போம். சொல்றபடி கேக்கலன்னா... தலை, கை, கால் எல்லாத்தையும் வெட்டுவோம்னு பகிரங்கமா கத்துவோம். இன்னும் கோபம் அதிகமானா தலைவர்கள் சிலைய உடைப்போம்.

**புஷ்** : அடடா, அந்தச் சிலை என்ன பாவம் செஞ்சது?

**கார்த்திக்** : அதுதானே அடிக்கும்போது திருப்பி அடிக்காது. அதனாலதான்.

**புஷ்** : அடேங்கப்பா... இங்க இவ்வளவு அரசியல் இருக்கா... நீ சொல்றதைப் பார்த்தா எனக்கு மயக்கமே வருது.

*(கார்த்திக் பலமாகச் சிரிக்கிறார்)*

**புஷ்** : ஏன் தம்பி... சிரிக்கிறீங்க?

**கார்த்திக்** : நீங்க... எங்களுக்கு அரசியல் சொல்லிக் கொடுக்க இங்க வந்திருக்கீங்க... ஆனா, எங்க தமிழ்நாட்டு அரசியல்வாதிங்க சிலர் அரசியல் சொல்லிக் கொடுக்க, உங்க நாட்டுக்குப் போயிருக்காங்க...

**புஷ்** : *(பதறியபடி)* ஹெல்ப் மீ... ஹெல்ப் மீ... அமெரிக்காவைக் காப்பாத்துங்க... அமெரிக்காவைக் காப்பாத்துங்க...

*(என்று அலறி அடித்துக்கொண்டு ஓட... கைதட்டிச் சிரிக்கிறார் கார்த்திக்)*



# சாக்கடையைக் கடக்க மூக்கைப் பிடி!

''ஒருவர் நடந்து செல்லும் வழியில், ஓர் அசுத்தமான குடிசைப் பகுதியைக் கடக்க நேரிடுகிறது. மூக்கைப் பிடித்துக் கொண்டு நடந்து அந்தப் பகுதியைக் கடக்கிறார். 'இத்தனை நாற்றத்தில் இரண்டு நிமிடம் நம்மால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. ஆனால், இந்த மக்களால் இங்கேயே உண்டு, உறங்கி எப்படி வாழ்க்கை நடத்த முடிகிறது?' என்ற எண்ணம் ஏற்படுகிறது. இன்று இந்த உலகில் மிகச் சிலரைத் தவிர, அனைவருமே இதைவிட இன்னும் மோசமான சாக்கடைகள் நிறைந்த பகுதியில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அங்கே கோபம், பொறாமை, சோம்பேறித்தனம், பழி வாங்கும் எண்ணம் என்ற பல சாக்கடைகள் இருக்கின்றன. ஆனால், இந்த உண்மை பலருக்குத் தெரிவதில்லை. கீதை அதைப் புரிந்து கொண்டு சமாளிக்க, திருந்த, திருத்த வழி காட்டுகிறது'' என்று கூறு கிறார் சுனந்தாஜி. இவர் நாடெங்கும் சென்று பகவத்கீதை தொடர் சொற்பொழிவுகளை நடத்தி வருபவர். வயதானவர்கள் மட்டுமின்றி, இளைய தலைமுறையினரும் திரளாக சுனந்தாஜியின் சொற்பொழிவுகளைக் கேட்க, ஆர்வமுடன் வருகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த ஆண்டு சுனந்தாஜியின் கீதை சொற்பொழிவு, வழக்கம்போல சென்னை காமராஜர் அரங்கில், ஜூலை பத்தாம் தேதி முதல் 14ஆம் தேதி வரை நடைபெறுகிறது. நேரம் மாலை ஆறரை மணி முதல் எட்டு வரை. இந்த முறை, பகவத் கீதை நான்காம் அத்தியாயத்தில் இடம்பெற்றுள்ள சுலோகங்களுக்கான விளக்கவுரை வழங்குவார்.

– அர்ஜுன்



''எதிரி மன்னன் சிறைச்சாலையை வேவு பார்க்க ஒற்றனை அனுப்பினீர்களே, ஏன் மன்னா?''

''போரில் நம்மை அவன் சிறை பிடித்து விட்டால், அங்கே சௌகர்யம் எப்படி என்று தெரிந்துகொள்ளத்தான்!''

– வெ.சீதாராமன்

# ஏசுவுக்கும் வீணை பிடிக்கும்...!

**ச**ரஸ்வதிக்கு நான்கு கரங்கள் - தஞ்சாவூர் ஜெபமாலைபுரத்தில் உன்னதமான வீணைக் கருவியை நான்கு கரங்கள் செதுக்கிக்கொண்டிருக்கின்றன - தொழிலாக. ஆம். குணாளபீட்டர், அவர் மனைவி பௌலின் இருவரும் 'நல்லதோர் வீணை செய்து..' விற்றுக் கொண்டிருக்கிறார்கள். அந்த கிறிஸ்தவ தம்பதியைச் சந்தித்த போது...

***வீணையை எந்த மரத்தில் உருவாக்குகிறீர்கள்?***

தரமான பலா மரத்திலிருந்துதான். குறிப்பா, பண்ருட்டியிலிருந்துதான் மரம் வாங்குவோம்.

**ஒரே ஒரு மரத்திலிருந்து உருவாக்கும் வீணைக்கு மதிப்பு அதிகம் என்கிறார்களே, உண்மையா?**

ஆமாங்க, சாதா வீணை ஆறாயிரம்னா ஒரே மரத்தில் உருவாகும் ஏகாந்த வீணை ஏழாயிரத்து ஐந்நூறு ஆகும்.



* குணாளபீட்டர்

***ஒரு வீணையைச் செய்து முடிக்க எவ்வளவு நாளாகும்?***

அனுபவத்தால எட்டு நாள்ல முடிச்சிடுவேன். செலவெல்லாம் போக, இரண்டாயிரம் லாபம் வரும் ஒரு வீணையில.

***வீணை செய்ய என்ன தகுதி வேணும்?***

தொழில ஆத்ம திருப்தியா செய்யற மனசும் இசை ரசிப்பும் இருந்தா போதும்.

***இந்தத் தொழிலை வேறு யாருக்காவது கற்றுக் கொடுக்கலாமே...?***

நிறைய பேருக்குச் சொல்லிக் கொடுத்திருக்கேன். யாராவது வந்தா, கத்துக் கொடுக்கத் தயாராயிருக்கேன்.

***நீங்க கிறிஸ்தவ தம்பதி...***

இருந்தா என்ன! ஏசுவுக்கு வீணை பிடிக்காதா என்ன?

'அட சபாஷ்' என்று விடைபெற்ற போது, 'அரசாங்கத்தில சொல்லி எங்கள மாதிரி வீணைத் தொழிலாளர்களுக்கு ஏதாச்சும் உதவச் சொல்லுங்க' என்றார்கள். அரசாங்கத்தில...?

* பௌலின்



செய்தி, சித்திரம் :
**மாமதி முருகன்**

# வாங்கியாச்சா?

**3 புத்தகங்கள்**

இணைப்பு:

**அம்மன் 64!**



**பகவான் பாபா தொடர் ஆரம்பம்!**

**ஆடி அமர்க்களம் ஷாப்பிங் ஸ்பெஷல்!**

என்றும் உங்களுடன் ஜூலை 2008

# மங்கையர் மலர்

தரத்திலும் **நம்பர் 1** மகளிர் மாத இதழ்!

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG s Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.